## முகவுரை

இந்திய நாட்டிலே முன்னாளிற் சக்கரவர்த்திகளாய்
ந்து அரசாண்டு நிலையான புகழ் படைத்தோருட் சந்திர
த மௌரியன் என்பான் ஒருவனாவன். உலகம் புகழும்
சாக சக்கரவர்த்தி இசந்திரகுப்தன் வழித் தோன்றலே
வன் என்று சரித்திரம் வல்லார் கூறுவர். இச் சந்திர
தன் இளம் பருவத்திலே அடைந்த இடையூறுகளும்,
ரபு சாணக்கியர் என்ற அந்தணர் உதவியாற் செல்வமும்
ப்பும் அரசுரிமையும் பெற்ற பெருமையும் நம் நாட்டில்
ளை பல மொழிகளிலும் பல்வகை நூல்களாலும் விளக்கப்
கின்றன. அரசியற் பொருள் நூல் ஒன்றைத் தம் பெய
ல் வழங்க வைத்த கௌடில்யராகிய சாணக்கியரது பெரு
மையை உலகம் அறியும். கௌடில்யர் அர்த்த சாஸ்திரம் இன்
ம் மேனாட்டவராற் போற்றப்படுகிறது.

இத்தகைய நுண்ணறிவாளரை, மேனாட்டவர், மாக்கிய
'ல்லி (Machiaveli) என்ற அரசியல் நிபுணர்க்கு நிகரான
என்று கருதுகின்றனர். அவரது சூழ்ச்சித்திறம் முழுவ
ம் விளங்கக் கன்னட மொழியிலும் சாணக்கிய சாகஸம்
ன்றதோர் நூல் அமைந்துள்ளது. வடமொழியில் உள்ள
ல்களில் நாடக வுருவத்தில் அமைந்த முத்திரா ராக்ஷசம்
ாற சிறு நூலைத் தழுவித் தமிழிலே முன்பு சில புத்தகங்
ர் வெளிவந்துள்ளன. அவை சென்ற போக்கிலன்றி இந்
லைக் கலாசாலை மாணவர்க்கேற்ற புதுமுறையில் இயன்றி

ருக்கும் இச் சிறிய புத்தகம், தமிழுலகுக்குத் தன்னால் இயன்ற பணியைப் புரிய முன்வருகின்றது.

பெரும்பான்மையும் வடசொற்களைக் கலந்து, நெடிய வாக்கியங்களாக அமைக்கப்பட்டிருந்த முதற்பதிப்பின் போக்கை ஒருவாறு மாற்றி இயன்றவரை எளிய தமிழ் நடையில் அமைத்து இப்பொழுது இந்நூல் வெளியிடப் பெறுகின்றது. வடமொழி வரலாற்றைத் தழுவிய நூலாகையால், வடசொற்களை அறவே யொழிக்க வியலவில்லை யென்பது உண்மையே. முதன் முதலாக இம்முயற்சியில் இறங்கிய திருச்சிராப்பள்ளி, செயிண்ட் ஜோஸப்ஸ் காலேஜ் உபாத்தியாயர் ஸ்ரீமான். S. A. சுப்பிரமணிய அய்யர் அவர்கள் B.A., L.T.. இந்நூல் அமைக்குந் துறையில் மிக்க சிரமம் மேற்கொண்டுள்ளார் என்பது, வடநூற் போக்கையும் இதன் போக்கையும் பார்ப்போர்க்கு விளங்கும். இப்பதிப்பில் அவரது நடையிற் சிறிது அங்கும் இங்கும் தமிழ் அமைப்புக்கு இயைந்த மாறுபாடுகளைப் புகவிடும் அத்துணையே எனது முயற்சியாகும். இப்புது உருவத்தில் வெளிவரும் இச்சிறு தமிழ்க் குழவியைத் தமிழிளஞ்சிறார்கள் தழுவிக் களிப்பர் என்று எதிர்பார்க்கிறேன்.

நா. கனகராஜய்யர்,

# பொருளடக்கம்

அத்தியாயம் பக்கம்

# சந்திரகுப்தன்

## முதல் அத்தியாயம்

### நவநந்தர் இளம்பருவம்

வட இந்தியாவில் மகததேசம் என்றதோர் பெரிய நாடு இருந்தது. அந் நாட்டின் தலைநகரம் பாடலிபுத்திரம் என்னும் அழகிய நகரமாம். முன்னளில் அந் நகருக்குப் புஷ்ப புரி, குசுமபுரி என்னும் வேறு பெயர்களும் வழங்கின. இந் நாளில் அதற்குப் 'பாட்ணு' என்ற பெயர் வழங்குகின்றது. நந்த வம்சத்துத் தோன்றலான சர்வார்த்தசித்தி என்னும் மன்னன் அந் நகரைத் தன் தலைநகராகக்கொண்டு மகத நன்னுட்டை மாண்புடன் ஆண்டு வந்தான். அவ்வரசனுக்கு மிக்க நுண்ணறிவு படைத்த இராக்ஷசன் என்போன் அமைச்சனுய் இருந்தான்.

சர்வார்த்தசித்தி, அரசகுலத்தில் உதித்த சுநந்தை என்னும் பெண்மணியைக் கோப்பெருந் தேவியாக மணம் புரிந்திருந்தான்; நான்காம் வருணத்திற் பிறந்த முரா என்ற மற்றொரு பெண்ணணங்கையும் தன் அன்பிற்குரிய தலைவியாக மணம் செய்திருந்தான். முன்னவளைக் காட்டிலும் பின்னவள் குண நலத்தாலும் இயற்கை எழிலாலும் சிறந்து, அக் கொற்றவனுக்கு உயிரினும் இனியவளா யிருந்தாள். மன்னன் இத் தேவியாருடன் பல்லாண்டு உலகில் வாழ்ந்திருந்தும் மக்கட் பேறு இன்மையால் வருந்தினன்.

இங்ஙனம் இவர்கள் வாழ்ந்து வருகையில், ஒருநாள் மாதவ முனிவர் ஒருவர் அரண்மனையை அடைந்தனர்.

அரசனும் அப் பெரியோரை இன்முகங்கொண்டு வரவேற்று உபசரித்து, உயர்ந்ததோர் பொன்னாதனத்தில் அமர்த்தி அவரது திருவடி விளக்கிய புண்ணியதீர்த்தத்தைத் தன் தேவிமார் இருவர் சிரத்திலும் தெளித்தனன். முரா தேவியின் தலையில் ஒரு துளி விழுந்து நிலைத்து நின்றது. அப்பெண் மணி அதனை மிகுந்த மரியாதையுடன் ஏற்றுக்கொண்டாள். அரசர் குலத்துதித்த சுநந்தாதேவி, வேண்டாவெறுப்பாய் அந்நீரைச் சிரத்தில் தாங்கினள். அவள் மனக்கருத்தின் அமைதிக்கேற்ப அந்நீர்த் துளிகளில் ஒன்பது அவள் தலையில் சிறிது போழ்து தங்கியிருந்து பின்பு நிலத்திற் சிதறியது. முனிவர் அவ்விரு பெண்டிரையும் மனமார வாழ்த்தி விடை பெற்றேகினர்.

சில மாதங்கள் கழிந்தபின்பு முராதேவி கருப்பவதியாகி, ஒரு நன்னாளில் நல்வேளையில் நற்குணங்கள் நிரம்பிய ஒரு மைந்தனை ஈன்றனள். முராவின் வயிற்றில் தோன்றியவனாதலின் அவன் மௌரியன் என்ற நாமம் இடப்பெற்றான்; உரிய காலத்திலே கல்விச் செல்வமும் போர்ப் பயிற்சியும் பெற்றான். மதிநலஞ் சிறந்த அம் மௌரியன், தனது ஒப்பற்ற குணத்தினாலும், நல்லொழுக்கத்தினாலும், தன் பெற்றோர் மனத்தை மகிழ்வித்ததுமன்றி நாட்டு மக்களும் தன்னிடம் அளவுகடந்த அன்பு பூணுமாறு நடந்து வந்தான்.

இந்நிலையில் தனக்கு இன்னும் மகப்பேறு உண்டாகவில்லையே என்று மிகவும் மனம் வருந்திய சுநந்தா தேவி, சில நாட்களின் பிறகு கருப்பவதி ஆயினாள். அரசனும் தன் குலம் விளங்க மகப்பேறு பெறும் காலம் குறுகியது என்று மகிழ்ந்து, அவ்வக்காலங்களிலே செய்து நிறைவேற்றற்குரிய

சடங்குகளை நன்கு இயற்றினன். ஈரைந்து திங்களும் இனிது கழிந்தபின் இராசமா தேவியாகிய சுநந்தை, அவயவம் ஏதும் இல்லாத ஒரு பெரிய ஊன்றடியை ஈன்றனள். அவ் வற்புதக் காட்சியைக்கண்டு அரசனும் நகரமாந்தரும் பெரி தும் மனம் வருந்திச் செய்வதறியாது தியங்கினர். அப் பொழுது, "மன்னவனே, நீ மனத்துயர் ஒழிக. இப்பிண்டம், உனக்கு ஒன்பது குமாரர்களை உதவவல்லது" என்று வான வெளியில் அசரீரி கூறியது. அவ் வாகாயவாணியைச் செவியுற்ற பின்பும் அரசன் மனத்தில் நம்பிக்கை பிறக்க வில்லை. அவ்வமயம், நுண்ணறிவு படைத்த அமைச்சர் தலைவனுகிய இராக்ஷசன், காந்தாரியின் கருப்ப பிண்டத்தி லிருந்து கௌரவர் நூற்றுவர் தோன்றியவரலாற்றைநினைந்து சுநந்தை ஈன்ற மாமிச பிண்டத்தை ஒன்பது கூறுக்கி, அவற்றை ஒன்பது குடங்களில் இட்டு நெய்யூற்றி வளர்ப் பித்தான். சில தினங்களில் அவை ஒன்பது குழவிகளாய்த் தோன்றலாயின. இங்ஙனம் இறைவன் அருளால் அரும் பிறவியாகப் பிறந்த தன் மக்கள் ஒன்பதின்மரையும் கண்டு அரசன் மனம் பூரித்தான்.

பின்பு மன்னன் அம்மைந்தர்களுக்கு உரிய காலங்களி லே சாதகன்மம், நாமகரணம், அன்னப் பிராசனம், சௌ ளம் முதலிய சடங்குகளை நன்கு நிறைவேற்றி உபநயனம் செய்வித்து, வேத முதலிய சாத்திரங்களை யெல்லாம் பயிலு மாறு செய்தான். அச் சிறுர்கள் அரச குமாரர்க்குரிய வில் வாள் வேல்முதலிய படைக்கலப்பயிற்சிகளும்,யானையேற்றம் குதிரை யேற்றம் தேர் செலுத்தும் திறம் முதலிய பயிற்சி களும் தக்க ஆசிரியர்களிடம் பெற்றனர். அவர்கள் அருங் கலைகள் அனைத்தும் நிரம்பி அறிஞர் போற்றும் நிலைமை

எய்தியதும், சர்வார்த்தசித்தி மன்னன் அரசப் பொறையை அவர்கள் தோளில் இறக்க எண்ணினான்.

ஒருநாள் அம் மன்னர்பெருமான் இராக்ஷசன் முதலிய அமைச்சர் பலர் தன்னைச் சூழ அமர்ந்திருக்க ஆஸ்தான மண்டபத்திலே அரியணையில் வீற்றிருந்தான். அந்த அவைக் களத்துக்கு அவனது குமாரராகிய மௌரியனும் நவநந்தரும் வந்து தத்தமக்கு உரிய ஆதனங்களில் அமர்ந்தனர். அரசன் நவநந்தர்களை நோக்கி "என்னருமைப் புதல்வீர்! இப்பொழுது நீங்கள் அரசுரிமையை ஏற்றுக் கொள்ளத் தக்க பருவம் எய்தி இருக்கிறீர்கள். யானோ மூப்பு மேலிட்டு, உடல் வலியும் அறிவின் உரமும் குறைந்து, தளர்ச்சியடையும் நிலையில் உள்ளேன். இனி இந்நிலப் பொறையைத் தாங்கியிருத்தல் என்னால் இயல்வதன்று. ஆதலின் உங்களில் ஒருவனிடம் இவ்விராஜ்ய பாரத்தை அளித்து, யான் வனஞ்சென்று தவம்புரிய விருபுகின்றேன். நீவிர் ஒன்பதின்மரும் ஒருங்கே ஏககாலத்தில் தோன்றியிருப்பதால் உங்களுள் மூத்தோன் இவன், இளையோன் இவன் என்று அறிதல் எளிதன்று. ஆதலின், 'இன்னானை அரசன் ஆக்குக' என்று உங்களுக்குள்ளே மன ஒற்றுமையோடு முடிவு செய்து என்னிடம் தெரிவிப்பீராயின், யான் அவ்வண்ணமே அளிக்கின்றேன். மௌரியன் அரச பதவிக்குத் தகுதியுடையவன் அல்லன். ஆகையால் அவனைச் சேனாதிபதி ஆக்குகிறேன். உங்கள் கருத்தை விரைவில் தெரிவிப்பீர்களாக" என்று கூறினான்.

நவநந்தர் இதுபற்றித் தமக்குள் ஆலோசனை செய்யும் பொருட்டு ஒரு தனியிடத்தை அடைந்தனர். மௌரியன் தனது நிலைமையைப் பற்றிச் சிந்திக்கலானான். "ஆ! ஆ! எனது தந்தையாகிய வேந்தர் பெருமான், மூத்த குமார

ளுகிய என்னை அரசுரிமையிலிருந்து விலக்கிவிட்டார். என் தாய் அவரது அன்பிற்கு உரியவளாயிருந்தும், எனது மாற்றாந்தாயின் மக்களே அரச பதவிக்கு உரிமை பெறுவாராயினர். எனக்கு நாட்டின் ஒரு சிறு பகுதியாகிலும் அளித்திருந்தால், நான் மனஅமைதியோடு வாழ்வேன். இப்பொழுது என் நிலைமை என்ன? என்னிடம் முன்பே தெரிவியாமலும் என் கருத்து இன்னது என்பதை அறியாமலும், என் தந்தை என்னைச் சேனாதிபதி ஆக்கியிருக்கின்றார். இப்பதவியில் இருப்பதால் நான், எனது மாற்றாந்தாயின் மக்களும் எனக்கு இளையோருமான நவநந்தர்க்குக் குற்றேவல் புரியும் சேவகனாய் வாழ்தல் வேண்டும். இந்நிலைமைக்கே யான் தகுதியுடையேன் என்று என் தந்தை முடிவுசெய்தது என் நெஞ்சைப் புண்படுத்துகின்றது. இருப்பினும் என்? இன்னும் என்னால் இயன்ற சூழ்ச்சிகளைச் செய்து நவநந்தர்க்குள் மனவொற்றுமை ஏற்படாதவாறு செய்துவிடுகிறேன்" என மௌரியன் தனக்குள் முடிவு செய்துகொண்டான்.

இந்தச் சூழ்ச்சி தன் உள்ளத்திலே தோன்றியதும், மௌரியன் முகமலர்ச்சியோடு அரச சபையினின்று நழுவி, நவநந்தருள் ஒவ்வொருவரையும் தனித்தனியே கண்டு மித்திரபேதம் செய்தான். அவர்களும் மௌரியன் கூறுவது நியாயமே என்று எண்ணித் தமக்குள் வேற்றுமையுடன் அரசவையை அடைந்தனர். அங்கு அமைச்சரும் அரசனும் மக்கள் கருத்தை அறிய ஆவலோடிருந்தார்கள்.

நவநந்தர் அரசன் முன்புவந்து நின்று, "தந்தையே, எங்களுள் யாரேனும் ஒருவன் அரசுரிமையை அடைவதும், மற்ற எண்மரும் அவனுக்குக் கீழ் அடங்கியிருப்பதும்

ஏற்றதென்று எங்கள் மனத்துக்குத் தோன்றவில்லை" என்றனர். அரசன் அது கேட்டு மிகவும் மனம் வருந்தினன். அருகில் அமர்ந்திருந்த அமைச்சர் தலைவனாகிய இராக்ஷசன், "இளவரசர்களே, உங்கள் மனம் ஒவ்வாமை எதனால் வந்தது? நேற்று வரையில் ஒன்றாய் இருந்து, உண்டு உடுத்து உறங்கி ஆடிப்பாடி மகிழ்ந்த அரசகுமாரர்கள், இன்று மன வேறுபாடு அடைவது என்பது எங்கும் நிகழாத அதிசயமாய் உள்ளது. துரியோதனாதியர் ஒரு நூற்றுவர் உங்களைப் போலவே சமகாலத்திற் பிறந்தவராய் இருந்தும், துரியோதனனைத் தங்கள் தலைவனாக ஏற்றுக்கொண்டார். நீங்கள் அங்ஙனம் ஒற்றுமைப்பட்டு வாழ விரும்பாவிடின், இந் நந்த ராஜ்யத்தை ஒன்பது சமபாகங்களாகப் பகுத்து உங்களில் ஒவ்வொருவர்க்கும் ஒவ்வொரு பாகம் அளிப்பதில் உங்களுக்குத் தடை யில்லையே?" என்றான்.

மௌரியனது சூழ்ச்சித் திறத்தால் மன மாறுபாடு கொண்டிருந்த ஒவ்வொரு குமாரரும், "இந் நந்த ராஜ்யத்தின் எப்பகுதியும் புஷ்பபுரிக்கு ஈடாகாது. எனக்கே புஷ்பபுரியைத் தருதல்வேண்டும்" என்று கேட்கலாயினர். இங்ஙனம அரச குமாரருள் கலகம் விளைந்ததற்குக் காரணனாயிருந்தவன் மௌரியனே என்பதை உய்த்துணர்ந்த இராக்ஷசன், தனது திறமையால் அவனது தீயவெண்ணம் நிறைவேறாதிருக்க ஆவன செய்யத் துணிந்தான். அவன் பின்னும் அரச குமாரர்களை நோக்கிச், "செல்வர்கள், இப் புஷ்பபுரி போலவே எல்லா நலங்களும் பொருந்துமாறு இன்னும் எட்டு நகரங்களை அமைத்துக் கொடுத்தால், நீவிர் ஒவ்வொருவரும் ஒவ்வொரு நகரத்தை ஏற்றுக்கொள்ளத் தடையில்லையே?" என்றான். அப்பொழுதும் அவர்கள் மனவொற்றுமையின்றி, "எத்தனை

தான் சிறப்பாக அமைத்தாலும், ஏனையவை இப்புஷ்பபுரிக்கு இணையாகா. இதுவே எமக்கு வேண்டும்'' என்று கூறினர்.

அம் மறுமொழியைக் கேட்ட இராக்ஷசன், மனம் மிக வருந்தி அரசன் முகம் நோக்கினான். அரசன் தன் மதலையர் மனத்தை மாற்ற வெண்ணிக், "குழந்தைகாள்! நீவிர் இங்ஙனம் ஒருவரையொருவர் நம்பாது வீண் கலகம் விளைப்பதால் பெரும் பயன் யாது? விருப்பம் இருந்தால் உங்களில் ஒவ்வொருவன் ஒவ்வொரு வருடமாக அரசாளலாம். அது சம்மதந்தானே?'' என்று வினவ, "அங்ஙனமாயின் முதல் வருட ஆட்சி எம்முள் யார் பெறுவது?'' என்று நவநந்தர் கேட்டனர்.

இங்ஙனம் ஒரு வழிக்கும் இணங்காமல் மாறுபட்டு நிற்கும் நவநந்தரது மனமாறுபாட்டைக் கண்ட இராக்ஷசன், அவர்களைநோக்கி "அரசிளஞ் சிங்கங்களே, நுமக்குள் இத்தகைய வேற்றுமை யுணர்ச்சி இருப்பது நுமது பகைவர் மனமகிழ ஏதுவாகும். அருகில் உள்ள பகைமன்னர், நீவிர் ஒற்றுமையாய் இருப்பதாக அறிந்தால், இத்திசையில் திரும்பவும் அஞ்சுவர். நுமக்குள் சிறிதேனும் மனமாறுபாடு இருப்பதாக அறிவாராயின், நாளைக்கே படையெடுத்து வருவதற்குத் துணிவர். ஆதலின், இறைவன் திருவுளத்தின் அமைவின்படி ஆகுக என்று திருவுளச் சீட்டுக் குலுக்கி, முதலில் யார் பெயர் வருகின்றதோ அவரே அரசுரிமை பெறுமாறு செய்யலாம். ஏனையோரும் தலைக்கு ஒவ்வோராண்டாக அரசுரிமை பெறலாம். இந்தமுடிவுக்கு இணங்காவிடில் உங்கள் முன்னோர் புகழுக்கு மாசு நேரிடும்; குலப்பெருமை குறையும். நமக்கு ஒன்பதின்மர் இளவரசர் இருந்தும் ஒருவரேனும் அரசுரிமைக்குத் தக்கவராக இல்லையே

என்று நாட்டு மக்கள் கருதவும் இடமுண்டாகும். ஆதலால் இங்ஙனமே செய்ய ஏற்றுக்கொள்ள வேண்டுகிறேன்" என்றான். அவன் கூறியவை நியாய நெறி தவறாத நல்லுரைகளாக இருத்தலைக் கண்ட நவநந்தர்கள் அதற்கு இசைந்தனர். மௌரியன் சூழ்ச்சியை எங்ஙனம் தகர்ப்பது என்று பெரு முயற்சி செய்த இராக்ஷசனும் ஒருவாறு வெற்றிபெற்றான்.

பின்பு ஒரு நன்னாளிலே சர்வார்த்தசித்தி மன்னன், தனது அரசுரிமையைத் தனது மைந்தர் ஒன்பதின்மர்க்கும் பொதுச் செல்வமாகக் கொடுத்து, இராக்ஷசன் கூறும் அற நெறிக்கிணங்க அரசு பூண்டிருக்குமாறு அவர்களை ஏவி, நிலையான பேரின்பம பெறுதற்குரிய நன்னெறியை நாடுங் கருத்தினனாய்த் தவம்புரியக் கருதி வனம் செல்ல ஆயத்தமானான்; அப்பொழுது தேவியரும், அமைச்சரும் பிற சுற்றத்தாரும், இளவரசர்களும், "வனவாசம் செய்தல் பொருத்தமேயாயினும், இன்னும் சில ஆண்டுகள் அரண்மனையிலேயே இளைப்பாறியிருந்து பிறகு செல்லலாம்" என்று வேண்டிக்கொண்டதால் சில காலம் தங்கியிருந்தான்.

இங்ஙனம் நவநந்தர் ஆட்சிக்குட்பட்ட அம்மகத நாட்டரசு ஒன்பது தலைவர்களை உடையதாய் இருப்பினும், அமைச்சர்க்குக் கூறிய இலக்கணங்கள் அனைத்தும ஒருங்கே அமையப்பெற்ற இராக்ஷசனது திறமையால் ஒரு பேரரசன் அரசாங்கம் போலப் பகைவர் அணுகுதற்கு அஞ்சும் தரத்ததாய் இருந்தது. முராதேவியின் மைந்தனாகிய மௌரியனும், வேறு விதியின்மையால், தன் தந்தை தனக்கு அன்போடு அளித்த படைத்தலைமையை ஏற்றுக்கொண்டான்.

## இரண்டாம் அத்தியாயம்

---

### மௌரியர் படுகொலை

படைத்தலைமை பூண்டிருந்த மௌரியன் தன் நிலைமைக்குத் தக்க குலங்களிலே பல மகளிரை மணந்து மைந்தர் நூற்றுவரைப் பெற்றான். அவர் அனைவரும், அறிவும் ஆண்மையும், ஆயுதப் பயிற்சியும் பெற்றவராய்த் தமது தந்தைக்கு இணையான திறமுடையவராய் விளங்கினர். அந் நூற்றுவருட் கடைசி மகனாகிய சந்திரகுப்தன் வீரர்க்குரிய பலவகைக் குணங்களிலும் தன் மூத்தோரைக் காட்டிலும் மேம்பாடுற்றுத் திகழ்ந்தனன். போர்த் திறத்தாலும், நூற் பயிற்சியாலும், அனுபவ அறிவின் நலத்தாலும், இயற்கை எழிலாலும், குண நலத்தாலும் நந்த ராஜ்யத்து மக்கள் அனைவரும் புகழ்ந்து பாராட்ட வளர்ந்த அந் நூற்றுவர், மௌரியன் மனத்துக்கு இனியராய் விளங்கினர்.

அரசவுரிமை பெறுவோர் ஆண்டுக்கொருவராய் மாறி மாறி வந்ததாலும், மௌரியனது படைத்தலைமை நிலையான பதவியாய்இருந்ததாலும், நவநந்தர், பெருமிதம், எளியோரை மதியாமை முதலிய குணங்களைக் கொண்டிருந்ததாலும், மௌரிய புத்திரர் நூற்றுவரும் அரச மரபினர்க்குரிய உயர் குணங்களும் தம் தந்தையின் நிலைமைக்கும் குலத்துக்கும் ஏற்ற சூழ்ச்சித்திறனும், அடக்கம் பணிவு இன்சொல் வழங்குதல் முதலிய நற்குணங்களும் அமையப்பெற்றிருந்ததாலும் குடிமக்கள் இயல்பாகவே மௌரியரிடம் மிக்க அன்பும் ஆதரமும் காட்டினர். மௌரியனும், பல வழிகளாலும் நாட்டு மக்களுக்குத் தன்னிடமும் தன்

மைந்தரிடமும் உள்ளன்பு பெருகி வளருதற்கு வேண்டுவன வெல்லாம் செய்துவந்தான்.

நந்தர் அரசராயிருப்பினும், படைகள்யாவும் மௌரியன் வசத்திலிருந்ததாலும், அவன் தன் மக்கள் நூற்றுவரையும் படைஞருள் சிறந்த நிலையிலே அமர்த்தியிருந்ததாலும், அரச அதிகாரமே அநேகமாய் அவன் பொறுப்பிலிருந்தது எனலாம். நாளுக்குநாள் மௌரியர்க்குச் செல்வாக்கு வளர்ந்துவருவதைக்கண்டு மனம் பொறுத நவநந்தர்களும், இராக்ஷசன் முதலிய அமைச்சர்களும், மௌரியர்களை எங்ஙனமேனும் ஒழித்துவிடவழிதேடும்பொருட்டு இரகசியமாய் மந்திராலோசனை செய்யலாயினர். நவநந்தர்கள் பொறாமையால் மனம் புகைந்து, "நாம் பெயரளவுக்கு அரசராய் இருக்கிறோம். எல்லா அதிகாரமும் ஒரு சேனாதிபதியின் வசத்தில் இருக்கிறது. அவனோ நம் தந்தையின் மனதுக்குகந்த முரா தேவியின் குமாரன். ஆசை நாயகியின் மகனாகிய அம்மௌரியன், நம் மீது உள்ளத்தில் கள்ளமிக்கவன் ; அந்தரங்கமாகப் பகை பூண்டிருக்கின்றான். அவனது குடும்பமும் நாளுக்கு நாள் வளர்ந்து வருகிறது. சேனையில் பல பொறுப்பான பதவிகளில் அவன் உறவினரும் மக்களும் அமர்ந்திருக்கின்றனர். எந்த வேளையில் நமக்கு எந்த தீங்கு விளைப்பானோ அறியோம். நாம் அவனோடு வெளிப்படையாகப் பகை பாராட்டி அவன் பலத்தை ஒடுக்கப் புகுந்தால், குடிகளில் பெரும் பாலோர் அவன் பக்கல் சார்வர். அதனால் உள்நாட்டுக் குழப்பத்துக்கு இடம் உண்டாகும். ஆகையால், எங்ஙனமேனும் பிறர் அறியாவண்ணம் வஞ்சகச் சூழ்ச்சி ஒன்றால் மௌரியனையும், அவன் மக்கள் நூற்றுவரையும் கொன்று ஒழிப்பதே நலம். முள் மிகுந்த கருவேல மரத்தைச் சிறிய செடியாய்

இருக்கும்போதே கையாற் கிள்ளியெறிதல் எளிதாம். பெரிய மரமாகி வயிரம் பாய்ந்தபிறகு அதனை கோடரிகளாலும் வெட்டி யொழித்தல் சிரமசாத்தியம் ஆகும். பகை சிறிதாயினும், அதை அலட்சியம் செய்யாமல் தற்காப்புச் செய்து கொள்ளுதல் அரசர் கடமை என்று அரசியல் நூல்கள் உணர்த்துகின்றன. நமது அமைச்சர் தலைவராகிய இராக்ஷசரும் இதற்கு இணங்குவார்" என்று தமக்குள் பேசி முடிவு செய்துகொண்டு அவனிடம் தெரிவித்தனர்.

இராக்ஷசன், தனது தலைவர்களாகிய நவநந்தரது எண்ணத்தை அறிந்து 'அதுதகும்' என்றுகூறி, மௌரியர் எல்லோரையும் ஏககாலத்தில் ஒழிப்பதற்கு ஒரு யுக்தியும் கூறினன். அமைச்சனது சூழ்ச்சித்திறத்தை அறிந்த நவநந்தர், அவன் சொல்லிய வண்ணம் செய்யத் துணிந்தனர். இங்ஙனம் இவர்கள் சதியாலோசனை செய்ததை மௌரியர் அறிந்திலர்.

பாண்டவர், கண்ணன் அருளாலும் தம் முயற்சித்திறத்தாலும் இந்திரப்பிரஸ்தம் என்னும் நகரத்தை அமைத்து, அதில் அழகியதோர் அரண்மனையும் பளிங்கு மண்டபமும் நிருமித்து, இராஜசூய யாகம் செய்து நன்னிலையில் வாழ்ந்தனர். அவ்வாழ்வு கண்டு பொறாத துரியோதனாதியர், சகுனி மாமனது சூழ்ச்சியால் அத்தினபுரியிலும் ஒரு புதிய மண்டபத்தை அமைத்துப், பாண்டவரை அதன் அழகு காண வரவழைத்துத் தருமனை அம்மண்டபத்திலே கவறாடச் செய்து, அவன் நாட்டையும் அரசையும் பிற உரிமைகளையும் கவர்ந்து பாண்டவரை அடிமைகளாக்கி, மானபங்கம் செய்து காட்டுக்கு ஓட்டினர். இது பாரத வரலாறு. இங்குத் துரியோதனாதியர்க்கு அவர்கள் மாமனாகிய சகுனி யுக்தி சொல்லி உதவி புரிந்தான்.

நவநந்தர், மௌரியரது வாழ்வின் நிலைகண்டு பொறுது அவர்களை அழிக்கக் கருதிய வஞ்சகச் செயலுக்கு அவர்களது அமைச்சனாகிய இராக்ஷசன் தக்க உதவி புரிந்தான். அவன் கூறிய உபாயங்களுக்கு இணங்க நிலவறை அமைக்கப்பட்டதும், நவநந்தர் அடிக்கடி அந்நிலவறை மண்டபத்துக்குச் சென்று இராஜாங்க காரியங்களை ஆலோசித்துவரத் தொடங்கினர். இராக்ஷசனும் பிற அமைச்சரும் அடிக்கடி அங்குப் போவதும் வருவதுமாக இருந்தனர். இம் மண்டபம் அமைந்த செய்தி குடிமக்களுக்குத் தெரியாமலே இருந்தது. அரசினர்க்குரிய மறைவான ஆலோசனைகள் பெரும்பாலும் அம் மண்டபத்தில் நிகழ்ந்து வந்தன. அவசியமுள்ள காலங்களில் மௌரியர்களும் அம்மண்டபத்திற்குச சென்று அரசர் ஆலோசனைகளுக்கு உதவி புரிந்தனர்.

இங்ஙனம் இருக்கையில், ஒருநாள் மௌரியன் தனது மாளிகையில் மைந்தர் சூழ உணவருந்திக் கொண்டிருந்தான். அவ்வமயத்தில் நந்தர்களால் அனுப்பப்பெற்ற தூதன் ஒருவன், அதிக பரபரப்புடன் மௌரியன் முன்சென்று வணங்கி, " ஐயன்மீர், நம் அரசாங்க சம்பந்தமான ஏதோ ஒரு அவசர விஷயத்தைப்பற்றி ஆலோசிப்பதற்காக, நம் அரசர்கள் இப்பொழுது நிலவறை மண்டபத்துக்குப் போயிருக்கிறார்கள். நீங்கள் உங்கள் மைந்தர் அனைவரையும் உடன்கொண்டு ஒருகணமும் தாழ்க்காது புறப்பட்டு வரவேண்டும் என்று ஆணையிட்டருளினர். உங்கள் வரவு அவர்களால் உடனே எதிர்பார்க்கப்படுகிறது " என்று கூறினான். அதுகேட்ட மௌரியனும் அவன் மைந்தரும் விரைந்து எழுந்து, தத்தம் வாகனங்களில் அமர்ந்து, நிலவறைமண்டபத்துக்கருகில்வந்து சுரங்க வழியே அதனுட் புகுந்தனர். இந்நூற்றொருவரும்

உட்புகுந்ததும் நிலவறைக் கதவுகள் முன்பே சித்தமாயிருந்த ஏவலரால் அடைக்கப்பட்டன. மௌரியருள் ஒருவரேனும் வெளி வருவதற்கு வழியில்லாது போயிற்று.

இந்நிலைமையை அறிந்த மௌரியன் மிகவும் அதிசயித்து மக்களோடு மண்டபத்துட் புகுந்து சுற்றுமுற்றும் பார்க்கையில், அரசர் அமைச்சர் முதலிய ஒருவரையும் காணுமல் உணவுப் பண்டங்கள் நிறைந்த நூற்றெரு பாத்திரங்களையும் நூற்றெரு விளக்குகளையும் கண்டனன். அக்காட்சியைக் கண்டதும், 'இது நம் மரபினை வேரறுக்கச் செய்த சூழ்ச்சியே' என்று துணிந்து தன் மக்களை நோக்கிப் பின்வருமாறு கூறினன்: "மக்காள், தாயாதியர் பகையைப் போற் கொடியது எதுவுமில்லை. மூத்த குமாரனுகிய எனக்கு அரசுரிமையில்லாமற் செய்ததோடு நில்லாமல், என்னையும் உங்களையும் கொன்றெழித்து, நந்த ராஜ்யத்தை அவர்கள் தனியரசாக ஆளத் துணிந்துவிட்டனர். ஒருவர்க்கும் ஒருவகைத் தீங்கும் நினையாத நமக்கு இப்பாவிகள் இத்தகைய கொடுமையை இழைக்கத் துணிந்தது, நெடுநாளைய சூழ்ச்சியின் விளைவாகவே இருக்கும். நாம் இன்றுவரை அவர்கள் கருத்தை அறியாமல் மயங்கியிருந்தது நமது தவக்குறையே. இம் மண்டபம் அதிக ஜன நடமாட்டம் இல்லாத இந்தச் சோலையில் நடுவிலே அமைக்கப்பட்டிருப்பதும் அவர்கள் எண்ணம் நிறைவேற உதவியாயிற்று. நம்மை அழைக்க வந்த தூதனது முகக் குறிப்பிலிருந்தே இப் பெருங்கேடு வரக் கூடும் என்பதை நாம் அறிந்திருக்கக் கூடும். அப்பொழுது நாம் மதிமோசம் போனேம். இங்ஙனம் விளைந்தது வினையின் பயனே. வினைப்பயனை வெல்ல வழியில்லை யென்று நாம் இப்பொழுதும் மனந் தளர்தல் ஆகாது. நாம் எல்லோ

ரும் இங்கிருந்து வெளியேறி உயிர்தப்பிப் பிழைக்க வழி ஏதும் இல்லை. இங்கிருந்த வண்ணமே நாம் எல்லோரும் உணவும் நீரும் இன்றி உடல் மெலிந்து உயிரிழக்க வேண்டு மென்பது நம் பகைவர் எண்ணம். அவர்கள் எண்ணம் நிறை வேறாதிருக்க எனக்கு ஒருவழி தோன்றுகிறது. அங்ஙனம் செய்யின், நம்மில் ஒருவனேனும் உயிரோடு வெளியேறி நம் மரபு அழியாமற் காத்து, இறைவன் அருள் இருந்தாற் பழிக்குப்பழி வாங்கலாம். அஃது யாதெனில், இக் கலங் களில் உள்ள உணவுப்பொருள்களை ஒன்றாகத் திரட்டி, விளக்குக்களில் உள்ள நெய்யை வீண் செலவு ஆக்காமல், ஒரு விளக்குக்கு வேண்டுமளவு உபயோகித்து எஞ்சியிருப்ப தைச் சேமித்து வைத்து, நம்முள் யாரேனும் ஒருவன் இவ் வுணவுப் பொருள்கள் உள்ளவளவும் உயிர்தாங்கி யிருக்க முயலவேண்டும்."

மக்கள் அனைவரும் அதுகேட்டு, ஒன்றும் கூற மன மின்றி மௌனம் சாதித்தனர். மௌரியன், தன் கண்களில் நீர் வடியக் கடைசி மகனாகிய சந்திரகுப்தனை நோக்கிக் "குழந் தாய், நீயே இனி நம் மரபை விளக்கும் பொறுப்பை ஏற்றுக் கொள்ளவேண்டும்" என்றான். சந்திரகுப்தன் அது கேட்டு மனம் மிக வருந்தினன்; ஆயினும் ஒருவாறு துணிவு கொண்டு, "தந்தையே, தம்முன்களே, நமது மரபு அழியாது காத்தல் என்ற ஒரு பெரும் புண்ணியம் கருதியும், நமது பகைஞர் இயற்றிய கொடுமைக்குப் பழிதீர்க்கும் கடமையை மேற்கொண்டும உயிர் தரித்திருக்க இசைகின்றேன். இறை வன் அருளால் நம் எண்ணம் நிறைவேறுவதாக" என்றான். அவன் மொழியைக் கேட்ட பிறர் எல்லோரும், அவனை நிறை மனத்துடன் வாயார ஆசீர்வதித்து, மனமகிழ்ச்சியோடு உயிர் துறந்தனர். அவனொருவனே அங்கிருந்த உணவை உண்டு, பல பிணங்களுக்கிடையில் உயிரோடிருந்தான்.

## மூன்றும் அத்தியாயம்

### மாயச் சீயமும் சந்திரகுப்தன் விடுதலையும்

மௌரியர் இங்ஙனம் மாயமாக மாண்ட செய்தி காட்டுத் தீயைப்போல நகரமெங்கும் பரவியது. அதனை அறிந்த நகரமாந்தர் அனைவரும் துயரக்கண்ணீர் உகுத்துக் கதறி அரற்றினர். நவநந்தரும், அவர்கள் அமைச்சர் தலைவனாகிய இராக்ஷசனும் அச்சமயத்திலே குடிகள் மனத்தைக் கவரத்தக்க நன்மைகள் பலவற்றைப் புரிந்தனர். அந்நலங்களை அனுபவித்து மனமகிழ்ந்த குடிகள், நாளடைவில் மௌரியர் கொலையுண்ட கொடுமையை மறந்தனர். இங்ஙனம் மூன்று மாதங்கள் சென்றன. நந்தர் நாட்டில் நிகழ்ந்த செய்திகளை அயல்நாட்டவர் பலர் அறியலாயினர். அவர்களுள் சிலர் வீரர் பெருமக்களாகிய மௌரியரை இழந்த மகதநாடு, முன்போல் வலிமை பெற்றிருக்கின்றதா என்று அறிய முயன்றனர்.

இச் சோதனையில் முதலில் இறங்கிய வங்கதேசத்து மன்னன் இருப்புக் கம்பிகளால் அமைந்த கூண்டொன்றில், மாயச்சிங்கம் ஒன்றை அடைப்பித்து தானும் மாறுவேடம் புனைந்து, அதைப்புஷ்பபுரிக்கு எடுத்துச்சென்று, "கூட்டைத் திறவாமலே சிங்கத்தை வெளியேற்றவல்லவர் முயல்வாராக" என்று கூண்டுக் காவலாளியாற் கூறச்செய்தான். அக்கூண்டு நவநந்தர் முன்னிலையிற் கொண்டுவரப் பெற்றது. மன்னரும் அமைச்சரும் மற்ற மதியூகிகளும் தம்மால் இயன்றவளவு முயன்றும், கூண்டைத்திறவாமலே அச் சிங்கத்தை வெளிப்படுத்த இயலாது மயங்கினர். அவ்வமயத்தில் மௌரியனிடம் உள்ளன்பு பூண்ட விசிகன் என்னும் மந்திரி, "இப்பொழுது,

மகா புத்திமானாகிய சந்திரகுப்த மௌரியன் உயிரோடிருப்பானாயின், அவன் இக்கூட்டினுள் இருக்கும் கோளரியை வெளியேற்றுதிரான். இறந்தவனைப்பற்றி இனி வருந்தி என் செய்யலாம்?" என்று கூறினான். அம்மொழி கேட்ட மன்னர் ஒன்பதின்மரும், தாம் இயற்றிய கொடுஞ் செயலைப் பற்றி நினைந்து, வருந்தி, நிலவறையில் அகப்பட்டாருள் ஒருவனேனும் உயிரோடு எஞ்சியிருப்பனோ என்று பார்க்க விரும்பி அங்குச் சென்றனர்.

நந்தர் நிலவறையின் வாயிலை அடைந்து அதனைத் திறந்து உட்புகுந்து பார்க்கும்பொழுது, பிணநாற்றம் மிக்க அப்பிலத்தில், எலும்பும் தோலுமாய் இளைத்த வுருவோடு சந்திரகுப்தன் ஒருவனே உயிரோடு இருக்கக் கண்டனர். அப்பொழுது அவர்கள் அவ்விளைஞனை நோக்கி, "அப்பா, குழந்தாய், சந்திரகுப்தா, இறைவன் செயலால் உன்னைச் சேர்ந்தவர் எல்லாரும் உன் கண்முன்னே இறக்க நேர்ந்தது. இவ்வாறு நேர்ந்த செய்தியை நாங்கள் அறியோம். நீ ஒருவனேனும் உயிருடன் உன் மரபை விளங்க எஞ்சி யிருப்பது கண்டு மகிழ்கின்றோம். உன்னை எங்கள் மைந்தன் எனவே கருதிப் போற்றுவோம். எம்முடன் வருக" என்று கூறினர். அதற்குச் சந்திரகுப்தன், "அன்பிற் சிறந்த சிற்றப்பன்மார்களே, என் தந்தையும் தமையன்மார்களும் இங்கு ஏககாலத்தில் மரணமடைய நேரிட்டது எவர் செயலாலாயினும், நான் அவர்கள் இறந்த விடத்தை அகன்று வெளிவந்து உயிர்வாழ விரும்பவில்லை. இவ்வளவு கோரக் காட்சிகளுக்கு இடையில் என் னுயிர் இன்றுவரை நிலைத்திருந்தது எனக்கே ஆச்சரியமாயிருக்கிறது. இனி யான் அதிகநாள் உயிர் தாங்கியிரேன்; இங்கேயே மரணமடைய விரும்புகின்றேன். எனக்கு விடை

கொடுங்கள்" என்றான். நந்தர் அம்மொழிகேட்டு மனமிளகி, "குழந்தாய், கழிந்ததற்கு இரங்குவது அறிவுடைமையாகாது. இனி நீ நன்கு வாழ்ந்து பலர்க்கும் பயன்பட எங்களால் இயன்ற உதவி செய்கிறோம். நீ ஒருவனேனும் உயிருடன் இருந்தால், இறந்தார் அனைவர்க்கும் ஈமக்கடன் கழிக்கலாம். உன் முன்னோர்க்கு உரிய கடன் கழிக்க ஒருவரும் இல்லாதொழிதல் நன்றன்று. உன் தந்தையார் செல்வத்தையெல்லாம் உன்னிடமே சேர்ப்பிக்கின்றோம்; வருக" என்று கூறினர். அவனும் அதற்கு இணங்கி வெளிவந்தனன்.

பின்னர், அவ்வரசர்கள் சந்திரகுப்தனைத் தம் அரண்மனைக்கு அழைத்துச் சென்று, சிங்கக் கூட்டைக் காண்பித்து, "சந்திரகுப்த, இக்கூண்டினுள் இருக்கும் கேசரியைக் கூண்டைத் திறவாமலே வெளியேற்ற வழியுளதோ?" என்று கேட்டனர். அவன் அக்கூண்டையும் சிங்கத்தையும் சிறிது நேரம் உற்று நோக்கினன்; காவலாளன் நின்றால் அது நிற்பதும், அவன் நடந்தால் அது கூண்டினுட் சுற்றிச் சுற்றி வருவதும் கண்டான். அக்காவலாளி ஒரு நீண்டதடியின் நுனியில் உணவுப் பொருளை வைத்து நீட்டும்போது, அச்சிங்கம் வாயைத் திறந்துகொண்டு பாய்ந்து வருவதையும் கவனித்தான். இக்காட்சிகளைக் கண்டதும், 'இது உயிருடைய உண்மைச் சிங்கமன்று; யாதோ ஒரு தந்திரத்தால் இயங்குகின்ற சிங்கப்பொறியே' என அறிந்தான். காவலாளியிடம் இருந்த தடி, காந்த சம்பந்தமுடையது எனவும், சிங்கம் இரும்பினால் இயன்று, மெழுகும் மயிரும் மூடியிருப்பது என்றும் உய்த்துணர்ந்தான்.

உண்மையை உணர்ந்த சந்திரகுப்தன், காவலாளியிடம் இருந்த கோலைத் தன் கையில் வாங்கிப் பரிசோதித்தான்;

அவ்வாறு தான் பரிசோதனை செய்ய முற்பட்டபோது, அக் காவலாளன் முகத்தில் அச்சக்குறி தோன்றியதையும் கண்டு கொண்டான். பிறகு பழுக்கக் காய்ச்சிய இருப்புச் சலாகைகளைக் கொணர்வித்து அம்மாயச சிங்கத்தின் உடம்பிற் படும்படி பிடித்தான். மெழுகினால் அமைந்த பகுதிகள் உருகி யோடிவிடவே, உள்ளமைப்பாய இருந்த இரும்பு உருவம் மாத்திரம் அசைவற்று நின்றது. வங்கநாட்டுக் காவலன் சந்திரகுப்தனது நுட்ப வறிவைக் கண்டு அதிசயித்துத் தன்னைப் பிறர் அறிந்து தொடராமுன் மறைந்து தனது நாட்டிற் கேகினன். சந்திரகுப்தன், தனது விடுதலைக்குக் காரணமாயிருந்த அவனுக்கு, நந்தரால் கேடு விளையா வண்ணம் தந்திரமான யுக்திகளைக் குறிப்பாய்த் தெரிவித்தான். பிறகு அரசரும் பிறரும் தத்தம் இருப்பிடம் அடைந்தனர்.

---

## நான்காம் அத்தியாயம்

## சாணக்கியன் வருகை

மாயச சீயத்தின் உண்மை நிலையை அறிந்து வெளியிட்ட மௌரிய சந்திரகுப்தனது மதிவன்மையைக் கண்டு மகிழ்ந்த மந்திரிகளும் அரசர்களும் இன்னது கூறுவது என்று அறியாது திகைத்தனர். நவநந்தர், "மாற்றார்களாகிய மௌரியர் குலம் வேரோடு மடிந்தது என்று மனங்களித்திருந்த நமக்கு, மதிமயக்கம் உண்டாக இளஞ்சிங்கம் போல இவன் பிழைத்து வந்துவிட்டானே. இனி இவனால் நமக்கு யாது விளையுமோ?" என்று தம்முள் அச்சங்கொண்டனர். அவ்வச்சம் ஒருபுறம் இருப்பினும், தம்முள் எவராலும் புரிய அரிதாகிய செயலை எளிதிலே புரியவல்ல மதிநுட்பம்

வாய்ந்த இளைஞனாதலின், இனி எப்பொழுதேனும் தமக்கு நேரிடக்கூடிய இடுக்கண்களைத் தடுக்கும் அவன் உதவியாயிருக்கக் கூடும் என்று எண்ணி, அவனைக் கொல்லாது உயிர் வாழ்ந்திருக்கச் செய்யலாம் என்ற ஆறுதலும் அவர்கள் உள்ளத்தே உண்டாயிற்று.

நந்தரும் அமைச்சரும் சந்திரகுப்தனுக்கு என்ன பதவி அளிப்பது என்பதைப்பற்றி நெடுநேரம் ஆலோசித்தனர். படைத்தலைமையை முன்போல மௌரிய வமிசத்தினரிடம் விட்டால் தமக்குக் கேடு விளையும் என்றும், வேறு எவ்வித அதிகாரப் பதவிகள் கொடுப்பினும், அவன் தமக்குப் பகையாய் எழுதற்கு இடமுண்டாகும் என்றும் கருதினர். உத்தியோகம் ஒன்றும் அளிக்காதிருப்பதும் அதிருப்திக்கு இடமாகுமே யென்ற எண்ணமும் அவர்களைப் பிடித்து வாதித்தது. இறுதியில் அந்தணரை உபசரித்து அன்னமிடும் பணியில் அவனை அமர்த்தலாம் என்று அவர்கள் முடிவு செய்தார்கள். அப்பால், அவர்கள் சந்திரகுப்தனை அழைத்து அப்பதவியை அளிக்க, அவனும் மௌரியன் மகனாகிய தனக்கு அப்பதவி தகுவது அன்றாயினும், அந்நிலையில் தான் வேறொன்றும் செய்ய இயலாமையால் முகமலர்ச்சியோடு அதை ஏற்றுக் கொண்டான்.

அரசர்க்குரிய போஜன சாலையில் அக்கிர போஜனம் செய்வதற்கு அந்தணர்களில் மிக்க மதிப்புடையவர்களைத் தேர்ந்து அமர்த்தும் பொறுப்பு மௌரிய சந்திரகுப்தனுக்கு வாய்த்தது. அவன் தினந்தோறும் நல்லோர் சிலரை அழைத்துவந்து, அவரவர்க்குரிய சிறப்புக்களைப் பெறுமாறு செய்வித்து வந்தான். இந்தப் பதவியில் அவனை அமர்த்திய நந்தர்கள், அக்கிர போஜனத்துக்கு அந்தணரைத் தேர்க்

கெடுப்பதில் இவன் யாதேனும் தவறு விளைத்து, அவரது சாபத்துக்கு ஆளாகி அழிவான் என்று எண்ணியிருந்தனர். அதற்கு மாறாக, அவன் அந்தணர் ஆசிபெற்று வாழ்ந்து வந்தான். சந்திரகுப்தனோ, தனக்கு இந்நிலைமை வாய்த்ததும் ஒரு நன்மைக்கே என்று எண்ணி மகிழ்ந்திருந்தான்.

இங்ஙனம் ஒவ்வொரு நாளும் வெவ்வேறு வேதியர்களை அக்கிர போஜனம் செய்யத் தெரிந்தெடுத்து உபசரிப்பதில் உற்சாகம் மேற்கொண்ட சந்திரகுப்தன், ஒருநாள் அந்நகர்க்கருகிலிருந்த ஓரடவி வழியே சென்று கொண்டிருந்தான். அங்கு அவன் சிறிது தூரத்திலே மிக்க தோற்றப் பொலிவொடு விளங்கிய அந்தணர் ஒருவரைக் கண்டான். இளவயதினராகிய அவ்வேதியர் அப்பொழுது விழிகள் இரண்டும் வெந்தழல்போற் சிவப்ப மிக்க சினங்கொண்டு, தாம் வரும்வழியில் முளைத்து,நடக்கும்போது தம்மை இடறி விழச்செய்த அறுகம்புல்லை வேரோடு களைந்து, தீயிட்டுச் சாம்பலாக்கி நீரிற் கரைத்து அதனை முற்றும் அருந்தினர்.

இவ்வதிசய நிகழ்ச்சியைக் கவனித்த சந்திரகுப்தன், அவ்வந்தணரிடம் சென்று, நிலத்தில் நெடிதுற வீழ்ந்து வணங்கி எழுந்து நின்று, கைகூப்பி, அதிக பயபக்தி வினயத்துடன் "மறைவல்லோய், அருளே உருவெடுத்துவந்த அந்தணர்குடியினராகிய நும்மைச் சிறியேன் ஒன்று கேட்டறிய விரும்புகின்றேன். அதனை அருள் புரிந்து தெரிவிப்பீர்களாக. இப்பொழுது வழியிற் கிடந்த அறுகம்புல்லை வேரோடு களைந்து நீறாக்கிக் கரைத்து அருந்தியதன் காரணம் யாதோ?" என்றனன். உடனே அவ்விப்பிரர் அவன் முகம் நோக்கிப் புன்னகை யரும்பி, "சிறுவ, யான் இவ்வழியில் வந்துகொண்டிருக்கையில், இவ்வற்பமான புல் எனது

காலில் மாட்டிக்கொண்டு என்னைக் கீழே வீழ்த்தியது. எனக்குத் தீங்கு விளைத்த அதனை நிலத்திலிருந்து பெயர்த்துத் தக்கவாறு தண்டித்தேன். சிறிய பகையாய் இருப்பினும், அறிவுடையான் அப்பகையை அறவே ஒழிக்கவே முயல வேண்டும். யானையின் நிழலும், முயல் குதித்தலால் நீரிலே தோன்றாமல் மறையும். இந்நிலையில் யான் செய்தற்குரியதையே செய்தேன்என்பதறிக" என்றனர். அதுகேட்ட சந்திரகுப்தன் மீண்டும் அவ்வந்தணரை நோக்கிப் "பொறுமைக்கு உறைவிடமாகிய புண்ணியர் குடியிற் பிறந்த பெரியீர்! நீவிர் புல்லைக் களைந்தெறிவது போதாது என்று கருதியோ, அதனை நெருப்பிலிட்டு நீறாக்கிப் பருகுகின்றீர்?" என்று கேட்டான். அந்தணரும் தம்மை வினவிய இளைஞனை அருளுடன் நோக்கிக், "குழந்தாய், யான் இப்பொழுது இவ்வண்ணம் இதனை நீறாக்கி நீரிற் கரைத்து உட்கொள்ளாதிருந்திருப்பேனாகில், என்னுள் பொங்கி யெழுந்த சினத்தீ என்னையே எரித்திருக்கும். சினத்தை அடக்குதல் சிறப்பே. ஆயினும் ஒருவன் தன்னுள் எழுந்து மண்டிக் கொழுந்து விட்டெரியும் நெருப்பையொத்த அதனைத், தணிக்கத் தக்க வழியையும் அறிதல் அவசியம்" என்றார்.

சந்திரகுப்தன் அம்மறுமொழி கேட்டு அதிசயித்து மீண்டும் அவரை நோக்கி, "பெரியீர், நமக்கு இடர்விளைத்த அற்பப் புல்லை இப்பாடு பட்டதென்றால், மனிதருள் எவரேனும் அறியாமையால் தம்மைப் பகைத்துத் தீங்கு புரிவராயின் எப்பாடு படுவரோ?" என்றான். அவ் வேதியர் மிக்க செருக்குடன் அவனை நோக்கி, "அடா சிறுவ, என்னை நீ அறியாய். எனது அறிவின் அளவையும் அதன் சிறப்பையும் பிறர் சொல்லக் கேட்டுமிலாய். அரசர் தம் பகைவரை வெல்

வதற்கு நால்வகைப் படைகளையும் பல்வகைப் படைக் கலங்களையும் பயன்படுத்துவர். யானோ அவை யெல்லாவற்றினும் மேம்பட்ட எனது நுண்ணறிவாகிய பெரும் படைக்கலத்தால் எத்தகைய வலிபடைத்த அரசர்களையும் எளிதில் வென்று அழித்தொழிக்க வல்லவனாவேன்" என்றார். அது கேட்ட சந்திரகுப்தன் மட்டற்ற மகிழ்ச்சியுடன் அவரது தாள்களில் மறுமுறை வீழ்ந்து பணிந்து, "நல்லீர், உருவுடன் எழுந்தருளிய தெய்வம்போன்ற உம்மை இன்னார் என்று அறியேன். அறிந்திருப்பின் இவ்வளவு நெருங்கி அளவளாவத் துணிந்திரேன். இனியேனும் யான் நும் பெருமையை அறிந்து அடங்கும் வண்ணம் உமது பெயர் ஊர் முதலிய வரலாறுகளை அறிய அவாவுள்ளவனா யிருக்கிறேன். அருள்புரிய வேண்டும்." என்று கேட்டான்.

சந்திரகுப்தனது மிகப் பணிவான வேண்டுகோளைச் செவியேற்ற அவ்விப்பிரர், "அப்பனே, யான் உலகில் அறிஞர் ஓதியுணர்தற்குரிய நன்னூல்களை யெல்லாம் கசடறக் கற்றுணர்ந்து, அரசியல் நூலில் மிக்க நிபுணனென்று புகழ் படைத்த விஷ்ணுசர்மா என்பவன் ஆவேன். என்னை உலகினர் சாணக்கியன் என்றும் கௌடில்யன் என்றும் கூறுவதுண்டு. எத்தகையோரையும் புறங்காணும் விதியின் வன்மையும் எனது மதியின் நுண்மை வெல்ல வல்லது. இப்பொழுது யான் நந்தர் அரண்மனையில் உணவு கொள்ளச் செல்கின்றேன். அங்கு அக்கிர ஸ்தானத்துக் குரியாரைத் தேர்ந்தெடுக்கும் பதவியில் மௌரியன் மைந்தனாகிய சிறுவன் ஒருவன் இருக்கின்றான் என்று கேள்வியுற்றேன். அவனை நீ அறிவாயோ? அவன் இவ்வமயம் எங்கிருப்பான்?" என்று வினவினர். அவ்வுரை கேட்ட சந்திரகுப்தன், 'கும்பிடப்

போன தெய்வம் குறுக்கே வந்தது' என்று மகிழ்ந்து தன்னு ளடங்காத சந்தோஷம் கொண்டு, மீண்டு மொருமுறை அவ ரைப் பணிந்து, "தக்கோரே, நீவிர் கேள்வியுற்ற சிறுவன் யானே. என்மீது அருள் கூர்ந்து இன்று நும் அடித்துகளால் எங்கள் நகரமும் அரண்மனையும் புனிதமாகும்படி செய் தருள வேண்டும். சான்றோராகிய நுமது வரவால், எங்கள் மன்னர் குலம் தழைத்தோங்கி நல்வாழ்வு பெறும் என்று நம்புகிறேன்" என்று பணிவுடன் கூறினன்.

சாணக்கியர் மிகவும் மனம் மகிழ்ந்து சந்திரகுப்தனை நோக்கி, "அப்பா, அரசகுமரா, சர்வார்த்தசித்தியின் பேர ளுகிய உன்னை இந்நேரம் வரையில் இங்கு நிறுத்திப் பொது ஜனங்களிடம் பேசுவதுபோலப் பேசிய எனது குறையைப் பொறுத்துக்கொள்க. உன்னிடம் அடக்கம், நல்லொழுக்கம், இன்சொல்முதலிய அரிய குணங்கள் பொருந்தியிருக்கக் கண்டு பெரிதும் உவக்கின்றேன். இப்பொழுது உன் விருப்பிற்கிணங் கிய ஒரு வரம் கேட்பாயாக. அதன்பிறகே, யான் நின்னுடன் நகரினுள் வருவேன்" என்றார். சந்திரகுப்தன் அதற்கு மறு மொழியாக, "தவசெல்வரே, நுமது அடியிணைகளை வணங் கப்பெற்றதே இன்று யான் பெற்ற பெரும்பேறு ஆகும். இதனினும் சிறந்த பேறு வேறு யாதுளது? நும் அருட்சிறப் பால் யான் இன்று இருப்பதைக் காட்டிலும் சிறப்புடைய எத்தகைய பெரும் பதவியை அடைவேனுயின், இன்று அழைத்தது போலவே நும் அமுத வாக்கால் 'சிறுவன்' என்றே அழைக்கப் பெறும் பேற்றையே யான் வரமாக வேண்டுகின்றேன். இன்னும் ஏதேனும் வரம் அருள விழை வீராயின், இன்று நீவிர் உணவுகொண்ட பிறகு எனது மனை யகம் அடைந்து, என்னை நும் அடிமையாக ஏற்றுக்கொண்ட

பிறகு அருள் புரியலாம்,'' என்று தெரிவித்து நகர்க்குள் வருமாறு அழைத்தான்.

சாணக்கியரும் "அங்ஙனமே யாகுக" என்று கூறி நகருள் நுழைந்தனர். சந்திரகுப்தன், அவருடன் நடந்து வரும்போதே தனது வரலாறுகளை யெல்லாம் அப்புண்ணிய சீலரது மனமுருகும்படி வெளியிட்டுரைத்தான். சாணக்கியர் அவ்வுண்மையை உணர்ந்து, "அரச பரம்பரையினர் இங்ஙனமும் செய்வரோ!'' என்று வியந்தவராய் நகரினுள் நுழைந்து அதன் பலவித அழகுகளையும் கண்டுகொண்டே மெல்ல நடந்துவந்தனர்.

## ஐந்தாம் அத்தியாயம்

## சாணக்கியர் சபதம்

இங்ஙனம், மௌரியர் மாண்ட வரலாற்றையும், அச் சமயத்தில் சந்திரகுப்தன் இருந்த நிலைமையையும் கேட்டறிந்த சாணக்கியர், அதன்மீது கருணை கூர்ந்து எவ்வகையிலேனும் அவனுக்கு உதவிபுரிதல் வேண்டும் என்ற எண்ண மிக்கவராய், அவனுடன் ஆற்றங்கரைக்குச் சென்று நீராடி நித்திய கருமங்களைச் செவ்வனே நிறைவேற்றி, நெற்றியில் திலகம் துலங்க, வேதம் மணக்கும் வாய்மலரோடு நந்தர் அரண்மனையை நெருங்கினார். அதுவரையில் உடன் வந்த சந்திரகுப்தனும் அவர்க்குத் தக்க உபசார மொழிகள் கூறி, அந்தணர் உணவு கொள்ளும் போஜன சாலையை அவர்க்குக் காண்பித்து உட்சென்று உணவு கொள்ளுமாறு கூறி விடை பெற்றுத் தன்னகம் சென்றான். அங்ஙனம் அவன் திரும்பிச்

செல்லும்பொழுது, 'இந்தகைய தவமுனிவரை யான் இன்று இங்கு அழைத்துவந்து அக்கிர பூஜைக்கு அமர்த்தும் பேறு பெற்றது என் முன்னோர் இயற்றிய நல்வினைப்பயன் என்றே கூறுவேன். மன்னர் ஒன்பதின்மரும், தமது செல்வச் செருக்கால் இப்பெரியோரை நன்கு மதியாது உருவத்தின் சிறுமை கண்டு எள்ளுவராயின், என்ன விளையுமோ அறியேன். எனது கடமையை யான் என் மனமார நன்கு நிறைவேற்றிவிட்டேன்; இனி எது விளையினும் விளைக' என்று தன்னுள் எண்ணிக்கொண்டே தனது மனையகம் புகுந்து, நீராடி உணவருந்திச் சிரமபரிகாரம் செய்துகொண்டனன்.

நடும் எடுப்பும் இல்லாத அறிவின் உரம் படைத்த சாணக்கிய முனிவரும், அரசரது ஊட்டுப் புரையிற் புகுந்து அதன்கண் ஒன்பது பொன்மயமான பாத்திரங்களும் அவற்றுக்கருகில் உன்னதமான பீடங்களும், வெள்ளியால் இயன்ற பல பாத்திரங்களும் அவற்றுக்கருகில் அமைந்த தனிப் பீடமும், வேறு வகையான எண்ணிறந்த பீடங்களும் கலங்களும் வரிசையுற வைத்திருந்த காட்சியைக் கண்டனர். அவற்றைக்கண்ட சாணக்கியர், அங்குள்ள அதிகாரிகளை நோக்கி, "ஐயன்மீர், இங்கே கிழக்கு முகமாய் அமைந்த ஒன்பது பீடங்களில் யார் அமர்வது வழக்கம்? மேற்கு முகமாக உள்ள ஒரு பீடத்தில் யார் அமரலாம்? சாமானியமாகத் தோன்றுகிற மற்ற இடங்களில் அமர்பவர் யாவர்?" என்று வினவிர். அதிகாரிகள் அது கேட்டு, "அந்தணரே, முன்னணியில் உள்ள பொற்கலங்கள் ஒன்பதும் எங்கள் மன்னர் பெருமக்களாகிய நவநந்தர்க் குரியவை. அவற்றுக் கெதிரில் அமைந்த வெள்ளிக் கலங்கள் அக்கிர பூஜை பெறுதற்குத் தகுதிபெற்ற அந்தணர் ஒருவர்க்காக

அமைக்கப் பெற்றன. மற்ற ஆயிரம் பீடங்களும் அரசருடன் ஒப்ப உணவு கொள்ளத் தகுதி பெற்ற பிற அரசகுமாரரும் அந்தணரும் இருத்தற்கு அமைந்தனவாம். ஐய, நீர் உமது தகுதிக்கேற்றதோர் இருக்கையில் அமர்ந்து உணவு கொள்ள லாம்" என்று கூறினர்.

அவ்வுரை கேட்ட சாணக்கியர், அங்கு வருதற்குரிமை பெற்ற அந்தணருள் ஆண்டில் முதியவர் அல்லராயினும், மறைநூற் பொருள்களை நுட்பமாய் ஆராய்ந்தறிந்த அறிஞராதலின் தாம் அக்கிராசனத்தில் அமர்வதே தகுதியாம் என்று துணிந்து, நந்தர் இருக்கைகளுக்கு முன்னிருந்த அக்கிராசனத்தில் பெருமிதத்தோடு அமர்ந்தனர். அத் தருணத்திலே போனகம் அருந்துமாறு போஜன சாலையை நாடிவந்த நந்தர் ஒன்பதின்மரும் உயர்ந்தோர்க்கே உரியது என்று தனித்திடப் பெற்ற உயர்ந்த பீடத்தில் அமர்ந்திருக்கும் உருவிற் சிறியராகிய அவரைக் கண்டு பெருவியப்பும் சினமுங் கொண்டு, "தவத்தாலும், அறிவாலும், வயதாலும் பெரியோராகிய அந்தணர்க்கென அமைந்த இந்த உயர்நிலையில் அமர்ந்திருக்கும் இச்சிறுவன் யார்? இவ்வரிசையில் உட்காரத் தக்க வரிசையும் பரிசுமில்லாத இவனை வெளியேற்றுங்கள்" என்று ஏவலரை நோக்கிக் கூறினன். ஏவலரும் அரசராணையை நிறைவேற்றக் கருதி நெருங்கினர். அதுகண்ட விஷ்ணு சர்மா, பொறுமையோடும் முகமலர்ச்சியோடும், "அரசர் பெருமக்காள், என்னைச் சிறுவன் என்று நீவிர் இகழ்ந்தது பொருத்தமோ, அன்றோ என்பதைச் சிறிது ஆராய்ந்து பார்க்கவேண்டுகிறேன். உலகில் எவரையும் உருவத்தைக் கண்டே மதிப்பது என்று உறுதி செய்துகொண்டால், அகத்தியரை யாரும் போற்றுதல் செய்யார்.

"உருவுகண்டு எள்ளாமை வேண்டும்; உருள்பெருந்தேர்க்கு
அச்சாணி அன்னார் உடைத்து"

என்பது பொதுவான தரும நீதியாம். இங்குள்ள அந்தண ருள் எவரேனும் என்னோடு வாதித்து எந்தச் சாஸ்திரத்திலே னும் என்னை வென்று விடுவாராயின் யானே இவ்விடத்தி னின்று எழுந்து அகன்று செல்கின்றேன். தகுதியுடைய ஒருவனைத் தக்க காரணம் இன்றிப் பலர் முன்னிலையில் அவமதிப்பது பெரும் பாவம் என்பதை அரசர் அறிந்திருக்க வேண்டும். உங்களுக்குச் சம்மதமாயின் இங்குள்ளார் எவரே யாயினும் வேத வேதாங்கங்களிலும் பிறகலைகளிலும் என் னோடு வாதம் புரியலாம். வெற்றியின் பிறகே எல்லோரும் உணவு கொள்ளலாம். என் மனம் புண்படத்தக்க இழி வுரைகளை அரசராகிய நீங்கள் கூறுவது, உங்கள் குலப்பெரு மைக்குப் பொருந்தாது. உயர்நிலையில் இருக்கத் தக்கவன் என்று உரிய அதிகாரியால் தெரிந்தெடுத்து இங்கு அனுப்பப் பெற்றிருக்கும் யான், இனி உணவு கொள்ளாது இவ்விடம் விட்டகலேன்," என்று சிறிதும் அச்சமின்றி மொழிந்தனர். அந்த அரிய நீதிமொழிகளைக் கேட்டும் அறிவு நலம்பெறாத நந்தர்கள், தாம் கொண்டதே கொள்கை என்று துணிந்து கடுவிடப் பாம்புபோற் சீறி ஏவலரை அழைத்துச், சாணக் கியரை அங்கு நின்று வலிந்து அப்புறப்படுத்துவித்து வேறொரு முதிய அந்தணரை அவ்விருக்கையில் அமர்த்தி உணவருந்தத் தொடங்கினர்.

அரச சேவகரால், சிகையைப்பற்றி வெளியிலே தள் ளுண்ட வேதியர் பெருமான் தம் மனத்துள்ளே கோபத்தீ கொழுந்து விட்டெரியக் கொற்றவர்களை நோக்கி, "ஓ, அற்ப சக்தியினால் அகங்காரம் கொண்ட அரசப் பதர்களே, நீங்கள்

என்னை இன்னான் என்று அறியாது, எனது குலத்தையும் கல்விச் சிறப்பையும் மதியாது, இங்ஙனம் ஆயிரம் அந்தணருக்கும் அரசர்களுக்கும் முன்னிலையில் ஏவலரைக்கொண்டு என்னைத் தள்ளுவித்தீர். நும் செயலால் என் சிகை அவிழ்ந்து குலைந்தது. என் சிகை குலைந்த செய்தி உங்களுக்குத் தெரிவிக்கும் உண்மை ஒன்று உண்டு. உன்னையொத்த பலர் முன்னிலையில் யான் இன்று சிகை குலைந்து அவமானப்பட்டதுபோல, வெகு விரைவில் நீவிர் ஒன்பதின்மரும் எதிர்பாராத பெரும் பகைஞர் கையிற் சிக்கிச் சிரம் குலைந்து மண்ணிற் புரளப் போகின்றீர்கள். உங்கள் மரபு உங்களோடு அழிந்தது என்று உலகம் கூறும். இப்பொழுது நீங்கள் எந்தப் பகையை ஒடுக்கிவிட்டதாய் எண்ணி மனப்பால் குடித்துக் கொண்டிருக்கிறீர்களோ, அப்பகைவர் மரபிலேயே எஞ்சி நிற்கும் ஒருவன் விரைவில் இந்நாட்டைக்கை கைக்கொள்வான். இந்த இரண்டு செயல்களையும் செய்து முடித்த பிறகே யான் இந்த அவிழ்ந்த குஞ்சியை முடிப்பேன்" என்று கூறிச் சினமடங்காது விரைந்து வெளிப்பட்டனர்.

அங்கிருந்த நன்மக்கள் அனைவரும், 'அரசர், அந்தணர் மனத்தைப் புண்படச் செய்யலாமா? அதனால் அரசமரபுக்கே கேடு விளையும் போலிருக்கிறதே?' என்று கருதிக் கலங்கினர்., அறிவில்லாத அரசகுமாரர்களோ, "பசியின் மிகுதியால் வருந்தும் இப்பார்ப்பான் பிதற்றுவதைப் பார்த்தீர்களா?" என்று ஒருவர்க்கொருவர் இகழ்ச்சி யுரையாடி நகைசெய்து சாணக்கியர் சபதத்தையும் அதனால் விளையவிருக்கும் தீங்கையும் சிறிதேனும் கருதாது அமுதமன்ன போனகமருந்தினர்.

அதன் பிறகு விஷ்ணு சர்மா, சந்திரகுப்தன் இருப்பிடத்தை நோக்கி நடந்து சென்றனர். அங்கு அவனைக்

கண்டு, " மாசற்ற குணமுடைய மௌரியனது மைந்தனே, இந் நந்த ராஜ்யத்துக்கு இனிமேல் அரசன் நீயே. நந்த மரபு அழிதற்குரிய நச்சுமுளை இன்றே தோன்றியது. யானே இன்று முதல் உனக்கு அமைச்சனாய் அமர்ந்து, தக்க சூழ்ச் சித்திறத்தால் விரைவிலே நீ அரசப் பதவி பெறுமாறு செய்கின்றேன்" என்று கூறினர். அதுகேட்ட சந்திரகுப்தன் மனமகிழ்ந்து, " அந்தணப் பெரியீர், நந்தருடன் அக்கிர போஜனம் செய்யச் சென்ற நீவிர், இதற்குள் இங்ஙனம் சூளுரை செய்யும்படி நிகழ்ந்ததென்ன? யான் அறியுமாறு கூற வேண்டுகிறேன், " என்று பணிவுடன் கேட்டனன்.

நந்தரால் தமக்கு நேர்ந்த பரிபவத்தையும், தாம் ஊட்டுப் புரையிற் கூறிவந்த சபதத்தையும் சாணக்கியர் விரிவாக எடுத் துரைத்தார். இம்மாற்றத்தைச் செவியேற்ற சந்திரகுப்தனும் நெடுநாளாய்த் தன் மனத்தில் நினைத்து நிறைவேற்ற வழி யறியாதிருந்த அருஞ்செயல், நிறைவேறத் தக்க காலம் குறு கியது எனத் தன்னுள் முடிவு செய்துகொண்டான். பின்பு சாணக்கியரை மனமுற வாயாரப் புகழ்ந்து துதித்து வணங்கி யெழுந்து கைகூப்பி நின்று, "இறைவனது தோன்றாத் துணை யன்றி வேறொரு துணையுமில்லாத சிறியேனுக்குத் தோன் றும் துணையாக வந்து தோன்றிய சான்றோரே, இன்று முதல் என்னை நும் அடிமையாக ஏற்றுக்கொண்டு அருள் புரிய வேண்டும். நீவிர் நந்தர் முன்னிலையில் வெளிப்படை யாகக் கூறிவந்த சூளுரையினால், இனி யான் இங்கிருப்பது எனக்கே தீங்காய் முடியும். இன்றுமுதல் என்னை எந்தச் சம யத்தில் என்ன விருப்பம் இருப்பினும் நிறைவேற்றுதற் குரிய ஏவலனாக ஏற்றுக்கொள்ள வேண்டுகிறேன்" என்று பிரார்த்தித்தான்.

விஷ்ணுசர்மா, சந்திரகுப்தன் நிலைமையைப் பற்றிச் சிறிது நேரம் தம் மனத்துள் எண்ணிப் பார்த்து, "குமார, இனி, நினது நல்வாழ்வு என் பொறுப்பில் உள்ளது என்று கருதுவாயாக. உனக்குத் தீங்கு நினைப்போர் எவரேயா யினும் அவரனைவரும் உன் கண்முன்னே மாய்ந்து மண்ணாகக் காண்பாய். நான், துரோணாசாரியர் கிருபாசாரியர் முதலிய அந்தணப் பெரியோர் போன்று வில்லும் அம்பும் கைக்கொண்டு போர் புரிபவனல்லேன். எனது மனமும் சொல்லும் செயலும் உனக்கு உதவுகின்ற மூன்று பெரும்படைகளாம். அவற்றைக் கொண்டே நான் உனக்கு வாழ்வும் வெற்றியும் வருவிப்பேன்," என்று கூறி அவனிடம் விடை பெற்றுத் தம் இருப்பிடம் நோக்கிச் சென்றார்.

## ஆறும் அத்தியாயம்
## சமணத் துறவி

இங்ஙனம் சந்திரகுப்தன் சாணக்கியரைச் சரண் புகுந்த செய்தி புஷ்பபுரி நகர வாசிகளுக்குத் தெரியாது. சாணக்கியர் தம் உறைவிடம் அடைந்ததும் தம்முடன் கல்வி பயின்ற தோழனாகிய இந்துசருமன் என்னும் அந்தணனை வரவழைத்து, நவநந்தர் தமக்கு விளைத்த பரிபவத்தை வெளியிட்டுரைத்து, அன்னவரை வேரறுத்தற்குத் தக்க யோசனையை அவனுடன் கலந்து ஆலோசித்தனர். இந்துசருமன் என்னும் அவ்வந்தணன் வேத சாஸ்திரங்களில் வல்லவனாய் இருந்தது மன்றிச் சோதிடம், அரசநீதி, வாகடம், மந்திர சாஸ்திரம், இந்திரஜாலம் முதலியவற்றிலும் அதி நிபுணனாய் இருந்தான். அம்மறையோனும் தனது மெய்ந்நண்பருட்

சிறந்த சாணக்கியருக்கு உற்றவிடத்து உதவிபுரியக் கருதிச் சமணத் துறவியின் வேடம் தாங்கிக், கையில் அவ்வேடத்திற் குரிய மயிற்பீலி தரித்து, உலக வாழ்க்கையிற் பற்றுதல் இல்லாத உள்ளமுடைய மெய்த்துறவிபோல் நல்லறி படைத்த பல சீடருடன் நந்தராஜ்யம் சென்று, புஷ்பபுரி நகரெங்கும் திரிந்து தன்னையடைந்த பலர்க்கும் நலம்புரிந்திருந்தான். அம்மாயத்துறவி, பிறரிடம் அதிகப்பொருளை விரும்பிப் பெறுமல் உயிர் நிற்றற்கு வேண்டும் அளவு பாலும் பழமும் பெற்று உண்டு, தனது எண்ணம் நிறைவேற எப்பொழுது சமயம் வாய்க்குமோ என்பதை எதிர்பார்க்கும் நாட்டமே உடையவனுய் அந்நகரில் வாழ்ந்து வந்தனன்.

இந்துசருமன் இங்ஙனம் துறவியாகித் தனது புகழ் நந்தர் அரசாட்சி செல்லும் நாடெங்கும் பரவ வாழ்ந்து வருகையில், அம்மன்னர்களின் அமைச்சருள் மகா மதியூகியாகிய இராக்ஷசன், சாணக்கியர் என்னும் வேதியர் போஜன சாலையில் அரசரால் அவமதிக்கப் பெற்ற செய்தியையும், அதனுல் அம் மறையோர் பெருஞ்சினங்கொண்டு கூறிய சூளுரையையும் ஒற்றரால் அறிந்து, நெடுநேரம் அதே சிந்தனையாய் இருந்து திண்ணத்துணையும் மனத்துணிவு பெறுது, அவமதிக்கப் பெற்ற அந்தணர் நம் அரசர்களுக்கு மந்திர சக்தியால் யாதேனும் தீங்கு விளைக்கப் புறப் படுமுன் நாம் அவர்களுக்கு எத்தகைய இன்னலும் விளையாது காக்க முயலவேண்டும்' என்ற உறுதிகொண்டு, அவ்வெண்ணம் நிறைவேறுதற்குத் தக்க உதவியை நாடியிருந்தான்.

அவ்வமைச்சன் நாடெங்கும் திரிந்து புகழ்படைத்த சமணத்துறவியாகிய ஜீவசித்தியைப்பற்றிப் பலரால் அறிந்து, தன் கருத்து நிறைவேற அவரது துணையை நாடலாமோ

என்று எண்ணமிடலானான். அத்துறவி நகர மக்களுக்குப் பலதிற நலங்களும் புரிவதை அறிந்து தன்னிடம் வருவித்து, "அடிகளே, நீவிர் எந்நாட்டவர்? எவ்வூரவர்? இந் நாட்டிற் சில நாட்களாகக் காணப்படுகின்றீரே? உமது இருப்பிடம் எங்கு உள்ளது? நாட்டவர் உம்மைப்பற்றிப் பாராட்டிப் பேசக் கேட்டேன். உமது உண்மைப் பெருமையை அறிய விரும்பியே இங்கு அழைப்பித்தேன். நும் வரலாற்றை யான் அறியக் கூறலாமோ?" என்று வினவினன். இந்தச் சந்தர்ப்பம் எப்பொழுது வாய்க்கும் என்றே எதிர்பார்த்திருந்த அப் பொய்த் துறவியும், அமைச்சனை நோக்கி, 'ஐயா, யான் மந்திர சாஸ்திரம் சோதிடம் வைத்தியம் முதலிய துறைகளில் நல்ல பயிற்சியும் அனுபவமுமுடைய ஒரு சமணத் துறவியாவேன். என்னை உலகினர், 'ஜிவசித்தி' என்ற பெயரால் அழைப்பர். எம்மவர்க்கும் வேதியர்க்கும் இடையில் அடிக்கடி பகையும் போரும் உண்டாகின்றது. சமணருட் சாமானியராய் இருப்போரை, அந்தணர் தம் மந்திரபலத்தால் ஒடுக்கிவிட முயல்கின்றனர். அம் முயற்சி பலியாவண்ணம், நான் என் மந்திர சக்தியால் என் இனத்தவரைக் காத்து வருகின்றேன். சமணத் துறவிகள் பள்ளியே எனக்கு உறைவிடமாம். எனக்கெனப் பொருளும், பொன்னும், உறவினரும், ஊரும், நாடும், உறைவிடமும் இல்லை. எல்லா நாடும் எல்லா ஊரும் எனக்குரியவையே" என்று கூறினன்.

அமைச்சர் தலைவன் அதுகேட்டு மகிழ்ந்து தன் உள்ளத்தில் நெடுநாளாய் மறைத்து வைத்திருந்த எண்ணத்தை வெளியிட்டுரைத்தான். ஜீவசித்தி சிறிதுநேரம் சிந்தனை செய்து, "ஐய, நீர் அம்மறையோன் செயலைப்பற்றிச் சிறிதும் அஞ்சவேண்டா. அந்தணரிடம் கரி, பரி, தேர், காலாள் என்ற

பண்டகளும் இல்லை. தோள்வலியும் வாள்வலியும் அவர்களுக்கு இல்லை. அவர்கள் கோழைத்தனமும் ஏழ்மையும் மிகுந்த குலத்தினர். வாய்வன்மை யொன்றே அவர்களுக்கு உள்ளது. அதைக்கொண்டு ஒரு அரசை அழித்து வேறொரு அரசை நிலைநாட்டுவது என்பது என்றும் நடைபெற வியலாத காரியம். அப்படியே அம்மறையோன் நும் அரசமரபினர்க்கு ஏதேனும் தீங்கு விளைக்க நினைத்திருப்பானாயின், அவற்றை அவ்வப்பொழுதே அறிந்து போக்கி, மன்னர் பெருமக்களைக் காப்பாற்றும் பொறுப்பை யான் ஏற்றுக் கொள்கிறேன்" என்று கூறினன்.

மந்திரத்தலைவன் அத்துறவியின் வாய்மொழிகளை வேத வாக்காக நம்பி அவனிடம் பூரண விசுவாசம் கொண்டு, அடிக்கடி அவன் அரண்மனைக்குச் சென்று வருவதற்கு வேண்டிய சௌகரியம் செய்து கொடுத்தான். அங்ஙனம் அரண்மனைக்கு வந்த நாட்களில், ஒருநாள் அம்மாயத் துறவி தனது மந்திர சக்தியால் நந்தர் ஒன்பதின்மரும் கொடியதோர் நோயால் வருந்தும்படி செய்து, அதனைச் சாணக்கியன் மந்திர பலத்தால் நேர்ந்தது என்று அமைச்சனுக்குத் தெரிவித்துத், தனது மயிற்பீலியால் அந் நோயை மாற்றி நலம் புரிந்து காட்டினன். அன்றே இராக்ஷசனிடம் "அந்தணர் எல்லோரும் இங்ஙனம் பிறர்க்குத் தீங்கு விளைக்கும் இயல்புடைய கொடியோர்களே. ஆகையால், அவர்களுக்கு அன்னமிடும் அறச்சாலைகளை அடைத்துவிடுவது நலம்" என்றும் துர்ப்போதனை செய்தான்.

பின்னும் சின்னாள் ஆனதும், ஜீவசித்தி தனது மந்திர சக்தியினல், நந்தர்களை ஏககாலத்தில் பித்துப் பிடித்துச் சித்தம் கலங்கிப் பிதற்றும்படி செய்துவிட்டு, இராக்ஷசன் கண்டு

அதிசயிக்கும்படி தானே அந்நோயை விரைவில் பரிகரித்து, அவ்வருஞ் செயல் கண்டு மகிழ்ந்த நந்தர்கள், தனக்கு அளித்த ரத்னக் குவியல்களைப் பெற்றுக்கொள்ள மறுத்துத் தனது உறைவிடம் சென்றான். பெரும் பொருள் வரும் பொழுதும் அதனைப் பொருட்படுத்தாதிருந்த அத்துறவி யின் பெருமையைக் கண்ட மன்னரும் அமைச்சரும், அவனைப் பெரிதும் போற்றிப் புகழ்ந்து பாராட்டி, அவனிடம் முன்னிலும் அதிக நம்பிக்கையும் பக்தியும் உள்ளவராயினர்.

அறிவின் வளம் படைத்த அந்த இந்துசருமனும், இங்ஙனம் தன் நண்பரது வேண்டுகோட்கிணங்கி அவர்க்குத் தீங்கு விளைத்த மன்னர்களை ஒழித்தற்குச் சமயம் பார்த்து, எளிதில் அவர்களைத் தன் வயமாக்கிக்கொண்டு பாடலிபுரத் தில் வாழ்ந்தான். அவன் சந்திரகுப்தனை ஒரு சமயம் நேரிற் போய்ப் பார்த்து, அவனை அரசனுக்கும் பொருட்டே சாணக்கியர் தூண்டுதலால் பலவகை முயற்சிகளும் நிகழ்ந்து வருவதால், நந்தர்களுக்குப் பலவகைக் கேடுகளும் விளையக் கூடும் என்று தெரிவித்து, அக் காலத்தில் சந்திரகுப்தன் நகரத்தில் இருப்பது நலமன்று என்று விளக்கிக் காட்டித், தந்தையின் அளவற்ற செல்வத்தோடு நகரத்தினின்று புறப் பட்டுப் பத்து யோஜனை தூரத்தில் இருந்த வர்த்தமானம் என்ற சிறிய கிராமத்தில் வாழ்ந்திருக்குமாறு கூறினன். சந்திரகுப்தனும் 'அதுவே தகும்' என்று கருதி அங்குச் சென்று வாழ்ந்துவந்தான்.

# ஏழாம் அத்தியாயம்

## நவநந்தர் அழிவு

சாணக்கியர் தம் நண்பனாகிய இந்துசருமன் உதவியாற் பலதிறப்பட்ட செய்திகளை அவ்வப்பொழுதே அறிந்துகொண்டு, நகர்க்கு வெளியில் இருந்தவண்ணமே நந்தர் படைவலியைக் குறைத்துச் சந்திரகுப்தனுக்கு வெற்றி வருவிக்க முயன்றுகொண்டிருந்தனர். போர்க்குரிய தந்திரங்களில், அரசர் கைக்கொள்ளத் தக்கவை அனைத்தையும் சாணக்கியர் அறிந்திருந்தனர். அவர் பெயரால் இன்றளவும் வழங்குகின்ற கௌடில்ய நீதி சாஸ்திரமும் அரசியற்குரிய நெறிகளை நன்கு விளக்குகிறது. சந்திரகுப்தனுக்கு உதவிபுரிய முன்னின்ற அப்பெரியோர், சில அரசர்களை அவனுக்குப் படைத்துணை புரிய அழைத்ததோடு, முன் நந்தர்க்குத் துணையாய் உள்ள சிலரைப் பிரித்துவிடவும் துணிந்தார்; போர் நேரிடும் காலங்களிலெல்லாம் நந்தர் மரபினர்க்கு உதவிபுரிவதையே தனது பணியாகப் பூண்டு, அதன்பொருட்டுப் பொருள் வரு வாய் பெற்றிருந்த வேட்டுவர் தலைவன் ஒருவன்மீது நவநந்தர்களுக்குச் சந்தேகம் தோன்றவைத்து, அவனைப் பிரித்துச் சந்திரகுப்தனிடம் பெரும் பொருள் பெற்றுக்கொண்டு போரில் உதவி செய்வதற்கு ஏற்பாடு செய்துகொண்டார். அன்றியும் மௌரியனிடம் மிக்க பற்றுடையராய் இருந்த படைத்தலைவர் பலரைத் தம் நாவன்மையால் மௌரிய புத்திரனாகிய சந்திரகுப்தனுக்கு உரிய காலத்திலே துணைபுரியுமாறு செய்துவைத்தார். இங்ஙனம் நாளுக்கு நாள் சந்திரகுப்தன் பொருள், படை, அமைச்சு, நட்பு என்ற பல வழிகளாலும் வலி சிறந்துவர, நந்தர் சிறிது சிறிதாக வலி குறைந்து வந்த

னர். சாணக்கியர் செய்கையால் இங்கு விளைந்த புதுமை யென்னவெனில், நந்தர் எந்நிலைமையில் அப்பொழுது இருந் தார் என்பதைச் சந்திரகுப்தன் நன்கு அறிந்திருப்பினும், அம்மன்னர்கள், தம் நிலையைத் தாமே அறியாது மயங்கி யிருக்கச் செய்ததே. அவர் செய்த சூழ்ச்சிகள் எல்லாம் மிக வும் மறைவாகவே நடந்தன. இம்மட்டோ! சந்திரகுப்த னுக்கு அவ்வப்பொழுது நிகழ்வனவற்றை அறிவிக்குமாறு பல வேறு மொழிகளிலும் வன்மை மிக்கவரும், சூழ்ச்சித் திறம் மிக்கவராய் மாறுவேடம் அணிந்து பிறர் தம்மை அறி யாது, பிறரது உண்மைகளை அறியும் திறம் முதலியவற்றில் வல்லவருமாகிய எண்ணிறந்த ஒற்றர்கள், சாணக்கியரால் நன்கு ஆராய்ந்து அமர்த்தப்பட்டனர். அவ்வொற்றர்களும் பலவகை மாறுவேடங்கள் தரித்து நாடெங்கும் திரிந்து ஆங் காங்கு நிகழும் செய்திகளையும், நவநந்தர் வாழ்வு முறை, நோக்கம் முதலியவற்றையும் கண்டுணர்ந்து தெரிவித்து வந்தனர். இங்கு இங்ஙனம் இருக்க, வெளி நாட்டில் நிகழ்ப வற்றை இனிக் கவனிப்போம்.

சாணக்கியர் பாடலிபுரத்துக்கு வடக்கில் நூறுயோசனை தூரத்திலிருந்ததோர் பெரிய மலைநாட்டின் தலைவனாகிய **பருவதேசுவரன்** என்பவனிடம் சென்று, நந்த மன்னர் தமக்கு விளைத்த அவமதிப்பையும், அதனால் தாம் செய்த சபதத்தையும் தெரிவித்தார்; தம் எண்ணம் நிறைவேறுமாறு படைவலிமையற்ற சந்திரகுப்தனுக்கு இனி நிகழவிருக்கும் பெரும் போரிலே படைத் துணையாய் நின்று உதவிபுரிந்து அதற்குக் கைம்மாறாக நந்தர் அரசிற் பாதியைப் பெற்றுக் கொள்ளுமாறு பேசினர்.

இச் சொல்லைக்கேட்ட பருவதகன், தனது சோதரனாகிய வைரோசகனுடனும், மைந்தனாகிய மலயகேதுவுடனும் கலந்து ஆலோசித்துப் பின்வருமாறு முடிவுசெய்தனன்: "சாணக்கியர், அரசியல் நீதியில் தமக்கு ஒப்பாரும் மிக்காரும் இல்லாத புலவர். அவர் இப்பொழுது பகைத்திருக்கும் நந்தர்களது வலிமையின் அளவையும் அதனைக் கெடுத்தற்குரிய வழிகளையும் நன்கு உணர்ந்தவர். ஆதலின் அவர் மொழிக்கிணங்கி நாம் நால்வகைப் படையுடன் நந்தர் நாட்டைத் தாக்கப் புறப்படுவோம். சந்திரகுப்தனுக்கு உதவியாய் நின்று அவனுக்கு நந்த ராஜ்யத்தின் அரசபதவியைத் தேடிக் கொடுப்போம். நமக்கு உடனே அவ்வரசிற் பாதி கிடைக்கும். அச் சந்திரகுப்தன் மிகவும் வலிமை குறைந்தவனாகையால், பின்பு கொஞ்ச நாட்களில் அவனையும் வென்று அந் நாட்டைக் கைப்பற்றிக் கொள்வோம். நம் மனக்கருத்தைப் பிறர் அறியாமல் முதலில் உதவிபுரிவோம்."

மலைநாடனும், அவன் தம்பியும், மைந்தனும் இங்ஙனம் தமக்குள் உறுதி செய்துகொண்டு, சாணக்கியரை நன்கு உபசரித்துத் தமக்கு அமைச்சராய் இருக்குமாறு வேண்டிக் கொண்டு, அவர் சொல்லிய நன்னாளிலே பெரும் படையோடு பாடலிபுரம் நோக்கிப் புறப்பட்டனர்.

சாணக்கியரும் ஆடி மாதத்துக் கிருஷ்ணபக்ஷப் பிரதமைத் திதியாகிய செவ்வாய்க்கிழமை இரவு பதினைந்துநாழிகைக்குப் பாடலிபுரத்திற் போர் தொடங்குதல் வெற்றியை விளைக்கும் என்று குறிப்பிட்டு, அத் தினத்துக்கு முன்பாகவே பருவதேசன் அங்குவந்து சேரும்படி ஏற்பாடு செய்து, நுண்ணறிவு படைத்த ஒற்றர் மூலம் இச் செய்தியை ஜீவசித்திக்கும் தெரிவித்தார். மலைநாட்டு மன்னன் இங்ஙனம் போர்க்குத் துணைபுரியவரும் செய்தி, சந்திரகுப்

தன் படையேற்கை தெரியாதிருந்தது. நவநந்தர், தம்மை நோக்கி வரும் படை வெள்ளத்தின் செயதியைக் கனவிலும் அறியாமல், இன்ப விளையாட்டுக்களிற் பொழுது போக்கிய வராய்த் தம்மை மறந்திருந்தனர்.

ஒற்றர்மூலம் உண்மையை அறிந்த சபணத் துறவி, தன்னை சேர்ந்தவர்களுக்கு நலம் பயக்குமாறு இச செய்தியைப் பயன்படுத்த முயன்றான். அவன் நந்தரது படைத்தலைவருள் ஒவ்வொருவனையும் தனித்தனியே தன்னருகில் அழைத்து, "நண்பனே, நிகழும் ஆஷாட கிருஷ்ணபக்ஷப் பிரதமையாகிய செவ்வாய்க்கிழமை யன்று நள்ளிரவில், அந்நிய தேசத்தரசன் ஒருவன், அளவற்ற பெரும் படையோடு வந்து, இப் புஷ்பபுரியைத் தாக்கப்போகின்றனன். இவவுண்மையை யான் எனது யோகமகிமையால் அறிந்தேன். அன்று இரவு நினக்கும் கிரகநிலை மிகவும் பிரதிகூலமாய் இருப்பதால், அவ் வேளையில் நீ போர்புரியப் புறப்படக்கூடாது. என்மொழியை அலக்ஷியம் செய்து புறப்பட்டால் நீ உயிரோடு மீள்வதரிது இவ்வளவும் உன்னிடம் எனக்கு இயல்பாய் எழுந்த அன்பு காரணமாகக் கூறுகின்றேனே யன்றி வேறன்று. பிறகு உன் விருப்பம்போற் செய்க" என்று கூறி விடுத்தான்; நந்தர்க்குத் துணையாய் நிற்கும் கடமைபூண்ட பிற அரசர்களுக்கும் படைத் தலைவர்க்கும் இங்ஙனமே செய்தி அனுப்பி, அவர் கள் மனத்தையும் மாற்றி விட்டான்.

சந்திரகுப்தனும் சாணக்கியரது கருத்திற்கிணங்க, மலை நாட்டு மன்னன் நந்தரைப் பகைத்துத் தனக்குத் துணையாய் நிற்கப் பெரும் படையோடு வருவானாகில், அவனுக்குத் தன் னரசிற் பாதி அளிப்பதாக ஒப்புக்கொண்டு அவனுடன்

கட்டுப் பூண்டு போர் புரிதற்குச் சித்தமானான். மேற்குறித்த தினத்தில் பருவதேசன் தனது படைஞரோடு புஷ்பபுரியை வடபால் வளைத்துக் கொண்டனன். சாணக்கியரும் அங்கு இருந்தனர். மௌரிய குமாரனாகிய சந்திரகுப்தனும், கிராதர் வேந்தனது படைத்துணை பெற்று, வேறு சில துணை யரசரோடும் படைத்தலைவரோடும் வந்து, வேறொரு புறம் சூழ்ந்துகொண்டு முற்றுகையிட்டான்.

இங்ஙனம் போர் நேரிடும் என்பதைக் கனவிலும் எதிர் பார்த்திராத நவநந்தரும், இராக்ஷசன் முதலிய அமைச்சரும், போர்ப்பறை முழக்கம் கேட்டுப் பெரிதும் திடுக்கிட்டு அவ்வமயத்திலே தம்மாற் சேர்க்கக்கூடிய சிறிய படையோடு சேனாதிபர்களைப் போர்புரிய முன் செல்லுமாறு ஏவினர். அத் தலைவருள் ஒவ்வொருவனும் ஜீவசித்தி முன்னதாகவே செய்திருந்த வேறொரு சூழ்ச்சியால் மயங்கி யிருந்ததால், விரைவிலே படை திரட்டி வராமற் காலதாமதம் செய்தனர். அக்காலை நந்தரும் தம் சிறுபடையோடு மலைநாடனை எதிர்க்கச் சென்றனர். போர்த்திறத்திலும் சூழ்ச்சித்திறத்திலும் வல்லவனான இராக்ஷசன் என்னும் அமைச்சர் தலைவன், சந்திரகுப்தன் நின்ற இடத்துக்குப் போர்புரியச் சென்றனன்.

சமர் புரிய முன்வந்த அமைச்சர் தலைவனைக் கண்ட சந்திரகுப்தன், அவனருகிற் சென்று, அவன் அடிகளில் வீழ்ந்துவணங்கி "ஐயா, அமைச்சர் தலைவரே, நவநந்தர்களைப் போல நானும் அரசமரபிற் பிறந்தவனே. ஆதலால் இவ்வரசில் எனக்கும் ஒரு பங்கு உண்டன்றோ? இப்பெரிய நாட்டில் ஒரு சிறு பகுதியையேனும் எனக்கென்று பிரித்துக் கொடுத்துவிட்டால், யான் இப்பொழுதே இப்போரை நிறுத்தி விடுகின்றேன். என் பொருட்டு மனமிரங்கி நீவிர் எனது பிதா மகராகிய பேரரசரிடம் என் வேண்டுகோளைத்

தெரிவித்து நியாயம் பிறப்பிக்க வேண்டுகின்றேன்" என்றான். அதனைச் செவியுற்ற இராக்ஷசன் கடுஞ்சினங் கொண்டு "அடா பாவி, குலத்தைக்-கெடுக்கவந்த கோடரிக் காம்பே, உன் நயவஞ்சகச்செயலை யான் அறிவேன். அன்றே நீயும் உன் மூத்தாரோடு இறந்திருந்தால் இவ்வளவும் விளைந்திராது. உனக்கு இவ்வரசில் உரிமை ஏது? அரச குமாரர்க்கே அரசு உரியதாம். நீ முராவின் வயிற்றிற் பிறந்த மௌரியன் மகன் என்பதை மறந்தாய்போலும். உன் தந்தைக்கே இல்லாத உரிமை உனக்கு எங்கிருந்து வரும்? இனி நீ உன் துணை வலியின் மதத்தாற் போர் தொடுக்கலாம். போர் தொடுத்துப் பெறக்கருதிய உரிமையை இரந்து பெறுதல் இயலாது" என்று மறுமொழி கூறினன்.

சந்திரகுப்தன் மீண்டும் பலமுறை அவனிட மொழிகள் கூறிப் போர் தொடுக்காமலே பொழுதுபோக்கி வந்தான். இங்கு இங்ஙனம் இருக்க, நவநந்தர்கள் பருவதேசனுடன் எதிர்த்துப் போர் புரிகையில், அம்மன்னன் தன் பெரும் படையோடு அவர்களைத் தாக்கிப் படைஞரை ஒழித்து, இறுதியிற் சாணக்கியரது கருத்துக்கிசைய அவ்வொன்பதின்மரையும் தன் கைவாளால் வீரசுவர்க்கம் சேர்த்தனன். உடனே சந்திரகுப்தனுக்குத் துணையாகவந்த படைஞரால் வெற்றிமுரசு முழக்கப்பட்டது. அம் முழக்கம்கேட்ட இராக்ஷசன், நந்தர் போர்புரிந்த களத்துக்கு விரைந்தோடி வந்து, அங்கு அசசகோதரமன்னர் ஒன்பதின்மரும் ஒருசேர மாண்டு கிடந்த கோரக் காட்சியைக் கண்ணுற்று, ஆறுப் பெருந் துயரக்கடலில் ஆழ்ந்து, சர்வார்த்தசித்தி என்ற கிழவரசனோடு நகர்க்குட் புகுந்தனன்.

அச்செய்தியை ஒற்றரால் அறிந்த சாணக்கியரும் பெரும் படையுடன் அப்புஷ்பபுரியை நாற்புறமும் வளைத்துக் கொண்டு, மீண்டும் அதனைத் தாக்குமாறு படைத்தலைவர் களுக்கு ஆணை பிறப்பித்தார். கிழவரசனோடுகூடிய இராக்ஷ சன், பகைவரை எதிர்த்துநின்று போர்புரியத் தக்க படை வலிமை இன்மையால், அரணைக் காவல் செய்து அரண்மனைக் குள் அடங்கியிருந்தனன். வெளிப்புறத்திலிருந்து பகைவ ரால் நெடுநேரமாகத் தாக்குண்ட நகரமக்கள், தம்முட் சில பெரியோர்களைச் சாணக்கியரிடம் அனுப்பி, "அந்தணர் தலைவரே, அரசர் யாருமின்றி அநாதர்களாய் அவதிப்படும் இந்நகர்வாசிகளை ஆதரித்துக் காத்தருளவேண்டும்" என்று தெரிவிக்கச் செய்தனர். அச்செய்தியைக் கேட்ட சாணக்கியர், அவர்களை நோக்கிப் "புஷ்பபுரி நகரவாசிகளே, இப்பொழுது சர்வார்த்தசித்தி என்னும் கிழவரசன் இந்நகர்க்குட் பதுங்கியிருக்கிறான். அவனுக்கு எம்மோடு போர்புரிய விருப்பமிருந்தால், விரைவிலே படையொடு வருவானாக. அங்ஙனம் அமர்புரிய ஆற்றலில்லாதவனாயின், இந்நொடியிலே கானகஞ்செல்ல வழிக்கொள்வானாக. அவன் வானகமோ, கானகமோ அடைந்தாலன்றி நாங்கள் உங்களுக்கு நன்மை புரிய வழியில்லை" என்று கூறினர். அதனை யறிந்த நகர ஜனங்கள், தம் மன்னனுக்கு அச்செய்தியைத் தெரி விக்க, அவனும் இராக்ஷசனுடன் மந்திராலோசனை செய்து, அவ்வமயத்தில் வேறெவ்வழியினும் செல்லத் திறம் இல்லை என்று அறிந்து, நகரத்தார் நன்மையை நாடி வனவாசம் செய்யப் புறப்பட்டான்.

உடனே சாணக்கியர் வெற்றி முரசு முழங்கிப் புதிய அரசரை வரவேற்கச் சித்தம் செய்யும்படி நகர ஜனங்களுக்கு ஆணை பிறப்பித்தார். அவர்கள் இராக்ஷசனுடைய ஆணைக்கு

அஞ்சி அடங்கி ஒடுங்கி நடந்த பழக்கம் உள்ளவர்களாகை யால், அவன் நகரினுள் இருக்கையிலேயே புதிய அதிகாரி கள் உத்திரவை ஏற்றுக்கொள்ள மனமில்லாதவர்களாய் இருந்தும், நினைத்ததை நினைத்தபடி நிறைவேற்றும் ஆற்றல் படைத்த சாணக்கியாது கட்டளையை மறுத்தற்குத் துணி வில்லாதவர்களாய் விரைவிலே வெற்றி முழக்கம்செய்து, புதிய அரசனை வரவேற்க நகரை அலங்கரித்தனர். சாணக்கி யர் இங்ஙனம் நவநந்தர்களை அழித்து நகரத்தைக் கைக் கொண்டனராயினும், பருவதேசன் சந்திரகுபதனுக்கு விரோதமாய் ஏதேனும் சதியாலோசனை புரியக் கருதுவான் என்று எண்ணி, வெற்றி வீரராகிய அவ்விருவரையும், அப் பொழுதே நகருக்குள் பிரவேசிக்க ஒட்டாமல் அரணுக்கு வெளியில் புதியதாய் நிருமித்திருந்த இரண்டு சிறிய விடுதி களில் இருக்கச் செய்தனர். இங்ஙனம் செய்த பின்பு "மலை நாடன் நம் சந்திரகுப்தனுக்கு யாதேனும் தீங்கு விளைக்க எண்ணியிருப்பானாயின், அவனையும் தந்திரத்தால் எமனுல குக்கு அனுப்பிவிடுவோம். நமக்கு எதிரிபும், புத்தி யுக்தி சாமர்த்தியங்களில் சிறிதும் குறைவற்றவனுமாகிய இராக்ஷ சன் என்னும் அமைச்சன் இப்பொழுது நம் கையிற் சிக்கி யிருப்பதால், தக்கவாறு தண்டித்து அடக்கிவிடுதல் எளி தாயினும், இராஜபக்தியும் வரும்பொருள் உரைக்கும் மதி வன்மையும் உடைய அன்னவனைப் போன்ற அமைசசர் கிடைப்பது அரிதாகையால், எங்ஙனமேனும சந்திரகுப்த னுக்கு அவனையே மந்திரியாக்கவேண்டும். சர்வார்த்தசித்தி இவ்விராக்ஷசனோடு சேர்ந்துகொண்டு, சந்திரகுப்தனுக்கு இன்னும் ஏதேனும் தீங்கு விளைக்க நினைப்பானாயின், அக் கிழவனையும் எமனுலகு சேர்க்கவேண்டும். ஆயினும் இராக்ஷ சன் இப்பொழுது பதவியும் நிலையும் இழந்து, 'நகமும்

பல்லும்போன கிழப்புலிபோல்' இருப்பினும், மிக்க மன வுறுதி படைத்தவனாதலால், இப்பொழுது சந்திரகுப்தனைச் சார்ந்து சேவகம் பூண ஒருப்படான். எனினும், நமது சூழ்ச்சித் திறத்தால் அவனுக்கு மௌரியன் மைந்தனைச் சார்ந்தாலல்லது உலகில் வாழ வேறுவழியில்லை என்று கருதத் தக்க நிலைமையை உண்டாக்கி, உபாயத்தால் அவனை நம் வசப்படுத்த முயல்வோம்" என்று தமக்குள் யோசித்து முடிவு செய்துகொண்டு சந்திரகுப்தனுக்குப் பகைஞர் அயலவர், அகப்பகைவர் முதலிய எத்தகையோராலும் எவ் வகைத் தீங்கும் நேரா வண்ணம் ஒற்றர், மெய்காவலர் முதலியோர் உதவியாலும் தமது அறிவின் திறத்தாலும் காத்துக்கொண்டு, 'இனி எது வரினும் அதற்குத் தக்கவாறு முயல்வோம்' என்று துணிந்திருந்தனர்.

## எட்டாம் அத்தியாயம்

## இராக்ஷசனது சூழ்ச்சிகள்

தன்னை ஆதரித்த தலைவர்களாகிய அரசர் ஒன்பதின் மரும் ஒருங்கே உயிரிழந்தும், தான்மட்டும் உயிரோடு எஞ்சி யிருப்பதால் மனம் புழுங்கிய உத்தம மந்திரியாகிய இராக்ஷ சன், தனது தலைவர்களுக்குக் கொடிய பகைவனாய் முளைத்த சந்திரகுப்தனை எவ்வகையாலேனும் ஒழித்துவிட்டு, முன் போலச சர்வார்த்த சித்தியை அரசனாக்கவேண்டும் என்ற எண்ணத்துடன் அக் கிழவரசனை வனத்திற்கு அழைத்துச் சென்று, அங்கு ஒரு தனியிடத்தில் ஒருவரும் அறியா வண்ணம் வாழ்ந்திருக்குமாறு செய்துவிட்டுப் புஷ்பபுரிக்குத்

திரும்பிவந்தான். புஷ்பபுரிக்கு வந்ததும் நேரிற் சந்திரகுப்தனிடம் சென்று, “அரசகுமார, இதுகாறும் யான் நவநந்தர்களது முதன் மந்திரியாய் இருந்து, மிகுந்த புகழுடன் வாழ்ந்தேன்; இப்பொழுதோ அவர்கள் எல்லோரும் போர்க்களத்தில் மாண்டதால், அராஜகமாய் இருக்கும் நாட்டில் அதிகார பதவியொன்றும் இல்லாதவனாய் இருக்கிறேன். உனது பாட்டனாரோ நாட்டைத் துறந்து காட்டை அடைந்து காய கனிகளை உணவாகக் கொண்டு தவம் புரிகின்றனர். யான் இனி அரசருள் எவரையேனும் அண்டிப் பிழைக்கவேண்டியவனே. நந்த பரம்பரையார்க்கு நான் இத்துணை யாண்டுகளாக மிகவும் நம்பிக்கைக்குப் பாத்திரமான அமைச்சனாய் இருந்திருப்பதை உலகம் அறியும். அனுபவ முதிர்ச்சி மிக்க என்னை, இந்நிலையிற் பிற அரசர்களும் தம்மிடம் மந்திரி பதவி வகிக்கும்படி அழைப்பார்கள். பருவதேசன் என்னை அமைச்சனாக்கிக் கொள்ள விரும்பியிருப்பதாக ஒற்றர் மூலம் அறிந்தேன். இனி அயலாரிடம் சேவகம் ஏற்றுக்கொள்வதைக் காட்டிலும், உன்னிடமே அமைச்சுப் பூண்டிருப்பது சிறப்பாகும் என்று எண்ணுகிறேன். இப்பொழுதே என்னை உனது மந்திரியாய் ஏற்றுக்கொள்ள வேண்டுகிறேன்” என்று கூறினான். இராக்ஷசனது வேண்டுகோளைச் செவியேற்ற சந்திரகுப்தன் சாணக்கியரோடு சிறிதுநேரம் மறைவிலே ஆலோசனைசெய்து அவர் கருத்துக்கிணங்க அப்பொழுதே முதல் அமைச்சனாகிய பதவியை இராக்ஷசனுக்கு அளித்தான். மௌரியன் மைந்தனை வஞ்சகச் செயல்களால் மாய்விக்கக் கருதியிருந்த அவ்வமைச்சனும், தன் கீழமைந்த அதிகாரிகள் பலரையும் முன்னைப் பழக்கத்தால் விரைவிலே வசப்படுத்திக்கொண்டு, எண்ணிய சூழ்ச்சிகளை ஒவ்வொன்றாய் இயற்றத் தொடங்கினான்.

முதலில் இராக்ஷசன், சிற்பிகள் தலைவனை அழைத்துக் கட்டிட அமைப்பிலே சில சூழ்ச்சிகள் செய்வித்தான்; யானைப் பாகர் தலைவனை அழைத்துச், சந்தர்ப்பத்துக்கேற்ப நடந்து சந்திரகுப்தன் உயிருக்கு முடிவு தேடுமாறு ஏற்பாடுசெய்தான். வைத்தியர்களையும் படைகளை நடத்தும் உத்தியோகஸ்தர்களையும் அன்னமிடும் ஏவலாளரையும் பிற அற்பத் தொழிலாளரையும் பெரும் பணக்கொடையால் வசப்படுத்திச சந்திரகுப்தனுக்குத் தீமை விளைக்கச் சித்தப்படுத்தியிருந்தான்; பல வழிகளிலும் வேண்டுவன செய்துவைத்து ஒன்றில்லாவிட்டால் மற்றொன்று பலிக்கும் என்ற எண்ணம் உடையவனாய், வெளிப்படையில் சந்திரகுப்தனிடம் அன்புமிகுந்த அமைச்சன்போல ஒழுகி வந்தான். சாணக்கியர், இராக்ஷசனுடைய சூழ்ச்சிகளை ஒற்றரால் அறிந்து, தம் அறிவின் திறத்தால் அவை ஒன்றேனும் பலியாவண்ணம் செய்துவந்தான்.

ஆரண்யம் புகுந்து தவவேடம் தாங்கியிருந்த சர்வார்த்தசித்தியும் அமைச்சனது தூண்டுதலால், முனிகுமாரவேடம் தாங்கிய தனது ஒற்றர் மூலம், காட்டிலே கொடிய நஞ்சூட்டப் பெற்ற இலந்தைக் கனிகள் சிலவற்றைச் சந்திரகுப்தனுக்கு அனுப்பினான். அக்கனிகளின் உண்மைத் தன்மையை தமது ஒற்றரால் அறிந்த சாணக்கியர், தமக்கு அந்தரங்கமான சில ஒற்றர்களைக் காட்டுக்கனுப்பி, முனிவேடம் புனைந்த ஒற்றர் ஒரு குளக்கரையிலே உறக்கத்துள் ஆழ்ந்திருக்கும்போது, அந்த நச்சுக்கனிகளைக் கவர்ந்துகொண்டு நிறம் உருவம் மணம் முதலியவற்றால் அக்கனிகளைப் போலவேயிருந்த நற்கனிகளை அங்குவைத்து வருமாறு செய்தார்.

நித்திரை தெளிந்தெழுந்த கிழவரசனது ஒற்றர்கள் சந்திரகுப்தனை அணுகி, "அரசே, கானகம் சென்று காய்கனி

களை உண்டு காலங்கழித்து வரும் நுமது பிதாமகராகிய சர்வார்த்தசித்தி யரசர், நும்மிடம் அவர் உள்ளத்தில் ஊறியெழுந்த அன்பின் மிகுதியால், நீங்கள், அருந்தி மகிழுமாறு சுவை மிக்க இவ்விலந்தைக் கனிகளை அனுப்பினர். இவற்றை அன்புடன் ஏற்றுக்கொண்டு எமக்கு விடைகொடுக்க வேண்டுகிறோம்" என்றனர். சாணக்கியரது ஒற்றரால் அக்கனிகளைப் பற்றிய உண்மை வரலாற்றை நன்கறிந்திருந்த சந்திரகுப்தன், முனிகுமார வேடந்தாங்கி வந்தவர்களிடம அன்போடு அவ்விலந்தைக் கனிகளை வாங்கிக்கொண்டு, அவர்கள் முன்னிலையிலேயே முகமலர்ச்சியோடு தின்று சுவைத்து இன்புற்று, அவர்களுக்கு உபசார வார்த்தைகள் சொன்னான். பிறகு அவர்களை நோக்கி, "முனிகுமாரர்களே, என்மீது கொண்டுள்ள அன்பு மிகுதியால் இக்கனிகளை அனுப்பிய எனது பிதாமகர்க்கு நானும் சில கனிகள் அனுப்பவிருக்கிறேன். அவை இந்நாட்டில் உண்டாகிய இலந்தைக்கனிகளே; காட்டுக் கனிகளின் சுவை அவற்றுக்கு இராதாயினும், நான் அனுப்பினேற் சமர்ப்பித்ததாகக் கூறி அவரிடம் கொடுங்கள்" என்று கூறிச் சாணக்கியர், ஒற்றரால் கவர்ந்து வருவித்த நச்சுக் கனிகளைக் கொடுத்தான். உண்மையறியாத முனிகுமாரர்கள் அவற்றை வாங்கிக்கொண்டு காட்டுக்குச் சென்று கிழவரசனை நெருங்கி அவற்றை அவனிடம் கொடுத்தனர். அவனும், அவை தான் அனுப்பிய நச்சுக்கனிகளே யென்பதை அறியாது, கனியின் மணத்தால் மனம் மயங்கி அவற்றைத் தின்று அரைநொடியில் அந்தகனுலகு சேர்ந்தான்.

இங்ஙனம் நந்தவமிசத்து விருத்த பூபதியாகிய சர்வார்த்தசித்தி வனத்தில் இறந்த செய்தியை ஒற்றர் மூலம் விரைவினில் அறிந்த இராக்ஷசன், அவ்வுண்மையை நாட்ட

வர் அறியாவண்ணம் மறைத்துச் சந்திரகுப்தனிடம் முன்னி
னும் அதிகமாக வயிரங்கொண்டு அவனுக்குப் பலவகைக்
கெடுதிகளும் இழைக்கத் துணிந்தனன். இந்நிலையில் அவன்
சந்திரகுப்தனது அமைச்சனாய் இருந்தும், மலைநாட்டு மன்ன
னாகிய பருவதேசனைத் தனியே கண்டு, "அரசே இந்நாட்டு
அரசுரிமைக்கு அநியாயமாக வழக்கிட்டுப் போராடி, நந்தர்
மரபை அழித்த கொடும்பாவியாகிய சந்திரகுப்தனைச் சதி
செய்து கொல்லும் விஷயத்தில் நீர் எனக்கு உதவியாய் நிற்பீ
ராயின், இந்நந்த ராஜ்யம் முழுவதையும் உமக்கே உரிமை
யாக்குகின்றேன். அவன் தயவுக்குக் காத்திருந்து பாதி
ராஜ்யம் பெற்றுக்கொள்வதைக் காட்டிலும், இதுவே சிறந்த
தாகும் என்பது உமக்கு விளங்கும். நேற்றுவரையில் நானே
இங்குப் பிரதான மந்திரியாய் இருந்து எல்லா அதிகாரிகளை
யும் மேற்பார்த்திருக்கிறேன். இன்றும் அவர்கள் என்கீழ்
இருக்கின்றனர். ஆகையால், நான் நினைத்த காரியத்தை நிறை
வேற்றுவது எளிதேயாகும். உம்முடைய உதவி இருப்ப
தால் நான் பெறும் நன்மை, பின்பு உம்மிடம் அமைச்சுரிமை
பெறுவதேயாகும். இஃது நலமென்று தோன்றின் இணங்கு
வீராக" என்று கூறினான். அதுகேட்ட பருவதேசுவரன்,
முன்பே அந்நாடு முழுவதையும் கவரும் நோக்கத்துடன்
போர்க்குப் புறப்பட்டு வந்தவனாகையால், 'தானே வரும்
சீதேவியைத் தள்ளிவிடலாகாது' என்று துணிந்து இராக்ஷ
சன் சூழ்ச்சிக்கு இணங்கினான்.

இச்சமயம், சமணத் துறவி வேடத்தனாய் இருந்த
இந்துசருமனும் இராக்ஷசனிடம் வந்து, "ஐய, அறிவிற்
சிறந்த அமைச்சர் தலைவனே, நினது தலைவராகிய மன்னர்
அனைவரையும் வஞ்சனையால் நமனுலகுக்கனுப்பிய சந்திர

குப்தனைச் சதி செய்து கொல்லத் தக்கதோர் உபாயத்தைத் தேடல் வேண்டும்" என்று கூறினன். அதற்கு மறுமொழியாக இராக்ஷசன் "துறவியாரே, எல்லாம் வல்ல உமது உதவியில்லாமல் என்னால் மட்டும் இம்முயற்சி இயலுமோ? சந்திரகுப்தன் விரைவிலே மரணம் அடையுமாறு நீர் எது செய்யினும் எனக்குச் சம்மதமே" என்று கூறினன். ஜீவசித்தியும் "நம் எண்ணம் நிறைவேறுதற்கு ஆவன புரிகின்றேன்" என்று சொல்லி, உடனே ஒரு மறைவிடத்தில் புதுமையான ஒரு யாகசாலை அமைத்து, அதில் மிகவும் கொடுமையான ஒரு ஆபிசாரஹோமம் செய்து, அவ்ஹோம குண்டத்தினின்றும் அழகே உருவமாய் அமைந்த ஒரு பெண்மணங்கைத் தோன்றச் செய்தனன். அத்துறவி, அவ்வணங்கை இராக்ஷசனிடம் இரகசியமாய்க் கையளித்து, "ஐய, மனிதரது மனத்தையும் கண்களையும் கவரவல்ல இரதிதேவியைப்போல் விளங்கும் இவ்விளமடந்தை, விஷகன்னிகையாவாள். எவனேனும் இப்பெண்ணின் அழகைக்கண்டு மயங்கி மணந்து தழுவுவனாயின், அவன் அக்கணமே எமனுலகு சேர்வன். உடனே இவளும் மின்னற் கொடிபோல் மறைந்துவிடுவாள். இவள் பெயர் விஷகன்னிகை என்பது. சந்திரகுப்தனுக்கு அர்ப்பணம் செய்யும் வரையில் இவளைப் பிறர் எவர் கண்ணினும் படாமல் மறைத்து வைத்தல் நலம்" என்று கூறினன். இச்செய்தியைக் கேட்ட இராக்ஷசன் 'இத்துடன் சந்திரகுப்தன் மாள்வது உறுதி' என்று தனக்குள் தீர்மானித்து, மிக்க மனமகிழ்ச்சியுடன் அக்கன்னிகையை ஒரு மறைவிடத்தில் வைத்துப் பாதுகாத்து வந்தனன்.

இவ்வாறு இருக்கையில், ஒருநாள் முன்னிரவில் இராக்ஷசன், சந்திரகுப்தன், சாணக்கியர், பருவதகன், அவன்

சகோதரனாகிய வைரோசகன், மகனாகிய மலயகேது என் போரும்,வேறு சில உத்தியோகஸ்தர்களும் ஒருசேர இருந்து இராஜ காரியங்களைப்பற்றிப் பேசிக்கொண்டிருந்தனர். அப் பொழுது இராக்ஷசன் சாணக்கியரை நோக்கி, "ஐய, அந்த ணர் பெருமானே, நிலவுலகத்துப் பெண்மக்களை யெல்லாம் தனது அழகால் வென்ற ஒரு பெண்ணணங்கு, இப்பொழுது என்னிடம் இருக்கின்றாள். அரும்பொருள்களை அரசர்க் குச் சமர்ப்பிக்க வேண்டும் என்ற நியாயத்தால், நான் அவ ளைச் சந்திரகுப்த மன்னருக்குக் கொடுக்க விரும்புகின்றேன். அவர்க்கென்றே அப்பெண்மணி இத்தனை ஆண்டுகளாக வளர்ந்தாள். ஆதலின், இப்பொழுதே அரசர் அவளை ஏற்றுக் கொள்ள வேண்டுகிறேன். இவ்விஷயத்தில் சாணக்கியரது அபிப்பிராயத்தை அறிய விரும்புகிறேன்" என்றான். ஜீவ சித்தியாகிய இந்துசருமனால் முன்பே இங்ஙனம் நிகழும் என்பதை அறிந்திருந்த சாணக்கியர், அங்கிருந்த பலர் முன் னிலையில் இராக்ஷசனை நோக்கி, "அரசனிடம் அன்பு மிக்க அமைச்சர் தலைவரே, இப்பொழுது நீர் கொண்ட கருத்து மிகவும் போற்றத் தக்கதே. இன்றிரவே சந்திரகுப்தன் அச் சுந்தரியை ஏற்றுக்கொள்வர். அப்பெண்மணியை அரசர்க்கு ஏற்றவாறு அலங்கரித்து விரைவில் அனுப்புவீராக" என்ற னர். அதனால் தன் எண்ணம் நிறைவேறியதாக எண்ணிய இராக்ஷசன், உடனே ஏவலாளரால் பள்ளியறையை அலங் கரிக்க ஏற்பாடு செய்து, அவ்விஷகன்னிகையை அவ் வறைக்கு அனுப்பிவிட்டுச், சந்திரகுப்தனை அவ்வறையிற் சென்று பள்ளிகொள்ளுமாறு வேண்டிக்கொண்டான்.

சந்திரகுப்தனும் சாணக்கியர் கருத்துக்கிசையப் பள்ளி யறைக்குச் செல்லுமாறு புறப்படுகையில், சாணக்கியர் எவ

ரும் எதிர்பாராவண்ணம் திடீரென்று அங்கிருந்தோர் முன் னிலையில் இராக்ஷசனை நோக்கி, "ஐய, அமைச்சர் தலைவரே, இப்பொழுது தன்னுயிரையும் மதியாது, தம்பியுடனும் தன யனுடனும் பெரும் படையுடனும் நமக்குப் போர்த்துணை யாக வந்து முன்னின்று பகையை ஒழித்துப் பேருதவி புரிந்த பெறுதற்கரிய பரம மித்திர சிகாமணியாகிய பருவதேசுவர மகாராஜன் இங்கு இருக்கையில், இச்சமயத்தில் இப்புவன சுந்தரியை அவருக்குப் பரிசாக அளித்து, நமது நன்றி யறிவைத் தெரிவித்துக்கொள்ளாமல், சந்திரகுப்தனையே இம் மடமகளை அங்கீகரிக்குமாறு செய்வது தகுமென்று எனக்குத் தோன்றவில்லை. இப்பொழுதுதான் இவ்வெண்ணம் என் உள்ளத்தில் உதித்தது. அங்ஙனம் புரிவதில் உங்களில் ஒரு வர்க்கும் ஆக்ஷேபம் ஒன்றும் இராது என்று எண்ணுகி றேன். ஆகையால், இப்பொழுதே பருவதேந்திரர் பள்ளி யறைக்குச் செல்வாராக" என்றனர். அதுகேட்ட இராக்ஷ சன் பெருங் கலக்கம் கொண்டு, 'கிணறு வெட்டப் பூதம் புறப்பட்டதே! இப்பொழுது நாம் சாணக்கியரது சாதுரிய மொழிகளுக்கு எதிர்மொழி பேசுவோமாயின், மலைநாட னுக்கு நம்மிடம் உள்ள அன்பு குறைவதோடு, சந்திரகுப்த னுக்கும் இங்குள்ள பிறர்க்கும் நம்மேற் சந்தேகம் தோன்ற வும் இடமுண்டாகும். ஆயினும், விஷகன்னிகையின் உண்மைச் செய்தியைப் பருவதேசனுக்குக் கூறி அவனைக் காப்பாற்றுவதற்கு முயலலாமென்றாலோ, அதற்கும் இப் பொழுது சந்தர்ப்பம் சரியாக இல்லை. இப்பொழுது இன்னது செய்வது என்று தெரியவில்லையே. உலகம் மெச்சிய எனது சூக்ஷ்மபுத்தி, சாணக்கியர் அறிவின் முன் இப்படி மழுங்கிப் போவது நந்த மரபினரின் துர்ப் பாக்கியமே,' என்று ஒன்றும் தோன்றாமல் ஏக்கங்கொண்டு

மனத்துள் இருப்பதை முகத்தால் வெளிப்படுத்தாமல், முக மலர்ச்சியோடு, "ஆம், அங்ஙனம் செய்வதே உசிதம்" என்று சாணக்கியர் ஆலோசனையை ஆமோதிப்பவன்போற் பேசினன். பிறகு பருவதேசன் சாணக்கியர் கருத்துக் கிணங்கப் பலருமறிய மனமகிழ்ச்சியோடு அப்பள்ளியறைக்கு விரைந்து ஏகினன்.

அங்கு அன்னத்தின் மென்மையான இறகுகளும், மலரிதழ்களும விரித்த பஞ்சணையில் மௌனமாய் அமர்ந்திருந்த மாய மடந்தையைக் கண்டு மயங்கிய மலைநாடன், அவளை நெருங்கிச் சென்று கையால் தொட்டவளவில் அவளது மூச்சுக் காற்றின் விஷவேகத்தால் உயிரிழந்து நிலத்திற் சாய்ந்தான். சந்திரகுப்தனிடம் பாதி இராஜ்யத்தைப் பெறுவதோடு அமையாமல், நாளடைவில் தன்னை நம்பிய அவனையும் வஞ்சனையால் ஒழித்து, நந்தர் அரசியல் முழுவதையும் கவர்ந்துகொள்ளக் கருதிய பருவதேசன், நிலத்தில் விழுந்து புரண்டான். இராக்ஷசனுடன் இரகசியமாயத் தோழமை பூண்டு, அவனைத் தன் மந்திரியாக்கி இரு பேரரசுகளின் தலைமையைத் தாங்க எண்ணிய அவன் மனக்கோட்டையும் இடிந்து பாழாயிற்று. அவன் இங்ஙனம மண்ணிற் புரண்டதும், மின்னனைய மேனிவாய்ந்த விஷயகன்னிகையும், தான் வந்த காரியம் நிறைவேறியதால், மேகத்தினிடையில் தோன்றி ஒரு நொடிப் பொழுதில் மறையும் மின்னற் கொடியைப்போல மறைந்தாள்.

பின்னர் இராக்ஷசன், தான் மௌரிய மரபை அழித்தொழித்து வஞ்சந் தீர்க்கக் கருதித் தொடங்கிய முயற்சி பலியாமல், தனக்கு மிக்க உதவி புரிவதாய் வாக்களித்திருந்த மலைநாட்டு மன்னன் மரணம் அடையத் தானே காரணமாய்

இருந்தது கண்டு மிகவும் மனந்தளர்ந்து, இனித் தான் புஷ்ப புரியில் இருப்பின் அரசரைக் கொலைபுரிய முயன்ற குற்றத் துக்கு ஆளாகித் தண்டனை பெற நேரிடும் என்று நினைத்து அன்றிரவே தனது மனைவி மக்கள் முதலிய சுற்றத்தாரைத் தன் உயிர்த்தோழனாகிய சந்தனதாசன் என்போன் இல்லத் தில் மறைந்து வாழ்ந்திருக்க ஏற்பாடு செய்து, ஒருவரும் அறியாவண்ணம் வெளியேறினன். வெளியேறு முன்பு, சந்திரகுப்தனைக் கொல்லுமாறு தான் அமர்த்திய பல ஏவ லாளர்களுக்கும் எங்ஙனமேனும் அவர்கள் எடுத்த காரி யத்தை நிறைவேற்ற முயலவேண்டும். என்று கட்டளை யிட்டுத், தன் நண்பனிடம் அவர்களுக்குப் பரிசளிக்குமாறு மிக்க நிதிக்குவியலை வைத்துவிட்டு மாறுவேடம் பூண்டு காட்டுள் நுழைந்து அயல்நாடு நோக்கி நடந்தனன். நகரத்தி னுள்ளிருந்து பலவகைப்பட்ட உட்கலகங்களையும் குழப்பங் களையும் நிகழ்வித்துக் கொடுமை விளைத்துக்கொண்டிருந்த இராக்ஷசன், இங்ஙனம் கொலைக் குற்றவாளியாகிவிடுவோம் என்ற அச்சத்தால் வெளிப்பட்டு மறைந்தது, சாணக்கியர் மனத்துக்கு அமைதியை விளைத்தது.

## ஒன்பதாம் அத்தியாயம்
## தோரண வாயில்

மறுநாட் காலையில், பிணமாய்க் கிடந்த பருவதேசனைக் கண்ணுற்ற நகர ஜனங்கள், மிகவும் மனங்கலங்கிச் சாணக்கிய ருக்கு அதனைத் தெரிவிக்கவே, அவரும் அப்பொழுதுதான் அச்செய்தியை அறிந்தவர்போல நடித்து, மிக்க சினத்தை யும் விசனத்தையும் வெளிக்காட்டிக்கொண்டு சேவகர்களை விளித்து, “ அரசரைக் கொலைபுரியச் சூழ்ச்சி செய்த பாவி

இராக்ஷசனை இப்பொழுதே பற்றிச் சிறைசெய்து அரசராணையாற் கொலை செய்யுங்கள்" என்று கட்டளையிட்டார்.

அவ்வேவலர் அமைச்சன் இல்லத்திற் புகுந்து பார்க்கையில், அங்கு ஒருவரும் இல்லாதிருக்கக் கண்டு, அச்செய்தியைச் சாணக்கியர்க்கு அறிவிக்கவே, அவர் "அமைச்சராயிருந்த இராக்ஷசர் ஏதோ சூழ்ச்சி செய்து பருவதேசனைக் கொலைபுரிந்தார்" என்று நகரெங்கும் பறை சாற்றுவித்தனர். இராக்ஷசனது உதவி பெற்றுச், சந்திரகுப்தனை வஞ்சனையாற் கொன்று அரசைக் கைக்கொள்ள எண்ணியிருந்த பருவதராஜன் இங்ஙனம் உயிர் இழக்கவே, அவனுடனிருந்து சதியாலோசனை செய்த அவனது சகோதரன் வைரோசகன், மகன் மலயகேது என்ற இருவரையும் இனி எவ்விதம் நடத்துவது என்பதைப்பற்றிச் சாணக்கியர் எண்ணமிடலானார்;

'இருவரையும் ஒருங்கே கொலை செய்வித்தற்குரிய உபாயங்கள் செய்தால், பருவதேந்திரன் கொலைக்கும் அவரே காரணர் ஆவர் என்று நாட்டவர் எண்ணுவதற்கு இடமுண்டாகும். ஆதலால், வைரோசகனை மட்டும் வதை செய்ய வழிதேடி வைத்து, மலையகேதுவை யாதேனும் ஒரு தந்திரத்தால் அவன் நாட்டிற்குத் திரும்பிப் போகும்படி செய்தல் நலமாகும்' என்று சாணக்கியர் தமக்குள் முடிவுசெய்தார். உடனே பருவதேசன் பக்கத்தில் இருந்து தக்கவாறு போதனைசெய்யும் வண்ணம் தாம் முன்பு அமர்த்தியிருந்த பாகுராயணன் என்ற மந்திரியை அழைப்பித்து, "அப்பா, பாகுராயண, நான் முன் கூறிய வண்ணம், நீ மலை நாட்டவர்க்குப் போதனைசெய்து வந்தது மிக்க நலம் விளைத்தது. இப்பொழுது நீ செய்தற்குரியதோர் அருஞ்செயல் உள்ளது. அதாவது அவனது தந்தையை இராக்ஷசனே கொல்வித்தான்

என்று நகரெங்கும் பறை யறைவித்திருப்பினும், நீ உனது நாவன்மையால் நானே அச்சதிச்செயலை செய்யத் தூண்டிய வன் என்று அவன் மனத்திற் படும்படி போதிக்கவேண்டும். இனி அவன் இங்கிருப்பின், அவனும் என்னால் அநியாய மாய்க் கொலையுண்பான் என்று அவன் மனத்தில் அச்சம் விளைத்து, அவனது சுதேசம் நோக்கி ஓடி உயிர் வாழும்படி கூறி, அவனுக்கு உற்றதுரைக்கும் நண்பனாகவும் அமைச்ச னாகவும் இருக்கக்கடவாய்" என்று சொல்லி அனுப்பினார். அதனைச் செவியேற்ற பாகுராயணனும் மலயகேதுவிடம் சென்று, "இளவரசரே, உமது தந்தை இறந்ததற்குக் காரண மாக ஊரார் பேசிக்கொள்ளும் செய்தி, முற்றிலும் பொய் என்பதை உண்மையை அறிந்து உணர்த்தும் ஒற்றரால் இப் பொழுதே அறிந்தேன். இராக்ஷசர் நேற்றுவரையில் நம்மி டம் மிக்க அபிமானத்தோடிருந்தவர். சந்திரகுப்தனைக் கொல் வதற்கு அவர் செய்துள்ள சூழ்ச்சிகளையும் நம்மிடம் கூறி யிருக்கிறார். அவர் உமது தந்தையைக் கொல்விப்பதால் அடை யும் நன்மை ஒன்றும் இல்லை. உம் தந்தை இறந்தால் அவ ருக்கு உள்ள வலிமையே குறைந்தது. உண்மை என்னவென் றால், தாம் கொடுத்த வாக்குறுதியின்படி உமது தந்தைக்குப் பாதி இராஜ்யத்தைக் கொடுப்பதற்கு இஷ்டப்படாத சாணக் கியரே, ஏதோ கொடிய சூழ்ச்சி செய்து உமது தந்தையை மாய்த்திருக்கிறார். இங்ஙனம் நம்பியவரை நட்டாற்றில் இறக் கிய அப்புண்ணிய புருஷர், இன்னும் என்னென்ன செய்வார் என்பதை நம்மால் அறிய இயலாது. அடுத்த நிலையில் இள வரசராகிய நீரே அந்த உரிமையைக் கொண்டாடக் கூடியவர். ஆகையால், உம்மையும் கொன்றொழித்துவிட அவர் என்ன ஏற்பாடு செய்திருக்கிறாரோ? வஞ்சகப் போராட்டம் செய்

பவரோடு நாம் படை வலியைக்கொண்டு என்ன செய்யக் கூடும்? ஆகையால் நாம் இப்பொழுது நம் நாட்டுக்குத் திரும்பிச் செல்வதே நலம் என்று தோன்றுகிறது. காலமும் இடமும் நமக்கு உதவியாய் இல்லாதபோது, நாம் போர்புரியத் துணிதல் நேரிதாகாது. நமக்குச் சமயம் வாய்க்கும்போது பார்த்துக்கொள்வோம்" என்று இனிக்கப் பேசி, அவன் தனது தந்தையின் சவசடங்கை நிறைவேற்றுதற்கும், தாமதியாமல் தன்னாடு நோக்கிப் புறப்படச் செய்தான்.

சாணக்கியர். இவ்வாறு இரகசியத்தில் பாகுராயணனைக் கண்டு அவனது துணையால் மலயகேதுவை அஞ்சியோடச் செய்துவிட்டுத், தாமே அவனைச் சுதேசம் சென்று சிறிது காலம் கழித்து மீண்டுவருமாறு கூறியிருப்பதாக வெளியில் நகரெங்கும் செய்தி பரவசசெய்தார். மலயகேதுவை இங்ஙனம் அவர் அனுப்பியதால், பருவதகனை அவரே கொல்வித்திருக்கலாம் என்று ஐயமுற்ற சிலரும் தம் உள்ளத்தில் எழுந்த எண்ணம் மாறி அவரைப் பாராட்டலாயினர்.

பின்பு இராஜ்ய தந்திரத்தில் மகா நிபுணராகிய சாணக்கியர், வைரோசகனைத் தம்மருகில் அழைப்பித்து இனிச செய்ய விருப்பதைப் பற்றி அவனிடம், "நமக்கு உற்ற துணையாக வந்த பருவதகரது சகோதரராகிய வைரோசக மகா ராஜரே, உமது மூத்த சகோதரரும், அவர் மைந்தரும், நீரும் சேர்ந்து படைத்துணை புரிந்ததற்குக் கைம்மாறாக நாங்கள் இந்த நந்த ராஜ்யத்தில் பாதியை அளிப்பதாக வாக்களித்திருந்தோம். எங்கள் வாக்கை நிறைவேற்றுதற்குரிய நல்ல நாளைக் குறிப்பிட்டு வேண்டுவன செய்யலாம் என்று யோசித்துக் கொண்டிருந்தோம். அதற்குள் அந்த மகா பாவியாகிய இராக்ஷசன் செய்த சூழ்ச்சியால் உமது சகோ

தரர் கொலையுண்டனர். அவர்க்குப் பிறகு இவ் விராஜ்யத்தில் ஒரு பாதியை அடைவதற்குத் தகுதியுடையவர் நீரே யென்று உறுதிசெய்து, உமது தமையனார் மகன் மலயகேதுவைத் தக்க உபாயத்தினால் மலைநாடு செல்லும்படி அனுப்பிவிட்டோம். ஆதலின் நாம், ஒரு நன்னாளில் இந்நகரிற் பிரவேசிக்குமளவும் நகருக்கு வெளியே உள்ள இப்புதிய மாளிகையில் இருக்கலாம்'' என்று நயமுறப் பேசி நண்புபூண்டனர்.

இதுநிற்க.மாறுவேடந்தாங்கிப் புஷ்பபுரியை நீங்கி அயல் நாடுகளில் மறைந்து திரிந்து, மௌரியன் மைந்தனைக் கொல்லத், தக்கதோர் சந்தர்ப்பத்தையும் உபாயத்தையும் தேடிக்கொண்டிருந்த இராக்ஷசன், மலயகேது புஷ்பபுரியை யகன்று தன்னாடு சென்றான் என்பதை அறிந்து, அவன்பால் நெருங்கி நட்புக்கொள்ள முயல்வானாயினன். நெடுநாள் வழிநடந்து களைத்துத் தன் தலைவரை இழந்த துக்கக்குறி முகத்திலே தோன்ற வந்த இராக்ஷசன், மலைநாட்டின் தலைநகரை அடைந்து, அரசர் அரண்மனையைக் குறுகி, வாயில் காவலர் எளிதில் வழிவிட உட்புகுந்து மலயகேது மன்னனைக் கண்டான். கண்டு, கண்ணீர் ததும்பத் தன் துக்கத்தைத் தெரிவித்து, ''அரசே, யான் எங்ஙனமாயினும் சந்திரகுப்தனைக் கொல்வித்து அவ்வரசை வாங்கித் தருகிறேன். உமது தந்தையார்க்கு நான் உரிய அமைச்சனாக அமரக் கருதியிருந்தேன். உண்மையில் நான் உமது மரபினரிடம் அபிமானமுடையேன் என்பதை அறிந்த நீர், என்னை மந்திரியாக ஏற்றுக்கொள்ளுதல் உம் அரசுக்கு நன்மை விளைக்கும்'' என்று கூறினன். இங்ஙனம் கூறிய இராக்ஷசனை மலயகேது மிகவும் வியந்து கொண்டாடி, உடனே தனது முக்கிய மந்திரியாக

அமர்த்திக்கொண்டதுமன்றித், தனது தந்தையின் மரணத் துக்குக் காரணமாயிருந்த சாணக்கியரையும், சந்திரகுப்தனை யும் எமனுலகுக்கனுப்பிய பிறகே, தனது தந்தைக்குச்செய்ய வேண்டிய ஈமக்கடனைக் கழிப்பதாகச சபதமும் செய்தான்; அயல் நாட்டரசர் பலரை அவர் தம் படைகளோடு தனக்குப் படைத்துணையாகச் சேர்த்துக் கொண்டனன்.

சாணக்கியர் மலைநாட்டில் நிகழ்ந்த இச்செய்திகளை யெல்லாம நுண்ணறிவு படைத்த தமது ஒற்றரால் அறிந்து கொண்டு, மேலும மேலும அங்கு நிகழும் முயற்சிகளை அறியவும, நந்த நாட்டின் பல பகுதிகளில் நிகழும் செய்தி களை அறிந்துரைக்கவும பின்னும பல ஒற்றரை அமர்த்தினர்.

இங்ஙனமிருக்கையில் ஒருநாள் சாணக்கியர் புஷ்பபுரி நகர ஜனங்கள் அனைவரும அறியுமாறு, சந்திரகுப்த மகா ராஜர் சகல பரிவாரங்களுடனும நகரினுட் பிரவேசித்துப் பட்டாபிஷேகம் செய்துகொள்ளப்போவதாகப் பறை சாற்று வித்துச, சிற்பிகள் பலரை ஏவி நகரெங்கும் நன்கு அலங் கரிக்கும்படி கட்டளையிட்டார். சிற்பிகள் அவரை நோக்கி, "சுவாமி, தங்கள் மனக்குறிப்பை முன்னமே அறிந்த தாரு வருமன் என்னும் சிற்பி, நமது நகரத்துக் கோட்டை வாயிலை நன்கு அலங்கரித்து விசித்திரமான தோரணங்களால் அழகு படுத்தியிருக்கிறான். ஆகையால் நாங்கள் நகரின் உட்புறத் திற் செய்தற்குரிய சிறப்புக்களை விரைவிற் செய்கின்றோம்" என்றனர்.

அதைக் கேட்டதும் சாணக்கியர், 'ஓகோ! தாருவர்மன் நாம் சொல்வதற்கு முன்பே தோரண வாயிலை அலங்கரித் திருக்கின்றானோ? ஆகவே இதில் இராக்ஷசன் சூழ்ச்சி ஏதேனும் இருக்கவேண்டும். விஷகன்னிகை வந்ததுபோல

இதுவும் ஒரு உபாயமாய் இருக்கலாம். எதற்கும் நாம் எச்சரிக்கையாய் இருப்போம்,' என்று தமக்குள் சிந்தித்து முடிவு செய்துகொண்டு, சிற்பிகளை நோக்கி, "சிற்பிகளே, நமது கட்டளையை எதிர்பாராமலே நம் கருத்தை அறிந்து இத்தகைய அலங்காரங்களைச் செய்துவைத்திருக்கும் உங்கள் தலைவனாகிய தாருவருமன், கூடிய விரைவில் தனது யுக்திக்கும் திறமைக்கும் இராஜபக்திக்கும் தக்க பரிசு பெறுவான். நல்லது, நீங்கள், அந்நகரத்தின் அலங்காரங்களை நன்கு நிறைவேற்றுங்கள்" என்று கட்டளையிட்டு அனுப்பினார்.

பிறகு சாணக்கியர், அன்றைய தினம் நள்ளிராப்பொழுதே சந்திரகுப்தன் நகரப்பிரவேசம் செய்தற்கு நற்பொழுது ஆகும் என்று சோதிடர் கூறியதாக நகரத்தினர்க்கு அறிவித்தார்; அன்று மாலைக் காலத்திலேயே வைரோசகனை நோக்கி "அன்பின் மிகுதியால் எமக்கு உற்றவிடத்தில் உதவிபுரிந்த அரசரேறே, முன்னம் நாம் உமக்கு வாக்களித்த வண்ணம், இவ்வரசில் ஒரு பாதியை ஏற்றுக்கொள்ளும் பொருட்டு இன்று நள்ளிரவில் நமது பரிஜனங்கள் புடைசூழ நகர்வலம் வந்து, நந்தர்க்குரியதாயிருந்த மாளிகையில் நன்முகூர்த்தத்திலே பிரவேசிக்க வேண்டும்" என்று வேண்டிக்கொண்டனர். அவ்வரசனும் தன்னுள் அடக்க வியலாத அகமகிழ்ச்சியுடன் "அங்ஙனமே யாகுக" என்று மறுமொழி கூறினன். உடனே சாணக்கியர் அவனுக்கு இன்மணம் கலந்த நன்னீரால் உரிய ஏவலாளரைக் கொண்டு நீராட்டுவித்துச, சந்திரகுப்தன் அணிதற்குரிய சிறந்த உடைகளையும், பொன்னாபரணங்களையும், மணிமாலைகளையும் அணிவித்துச், சந்திரகுப்தனுக்கமைந்த விருதுகளும் பரிவார ஜனங்களும் முன்னும் பின்னும் மெல்ல வருமாறு செய்து, சந்திரலேகை என்னும் பெயர்வாய்ந்த பட்டத்து யானையின் மீது அவனை

யேற்றிப், பதினெண்வகை வாத்தியங்களும் முழங்க, வெகு சிறப்புடன் அரண்மனையை நோக்கிப் புறப்படச் செய்தனர். அந்நள்ளிருளில், விளக்கொளியில் அவனைப் பார்த்த நகர மாந்தர் அனைவரும், 'சந்திரகுப்தனே பவனி வருகின்றான்' என்று எண்ணினர். இஃது சாணக்கியர் சூழ்ச்சி யென்பதை ஒருவரும் அறியார்.

உயரம், தோற்றம் முதலியவற்றினாலும், அலங்காரத்தாலும் சந்திரகுப்தனைப் போலவே இருந்த வைரோசகன், இங்ஙனம் வெகு ஆடம்பரத்துடன் கோட்டைவாயிலை நெருங்கவே, இச்சமயத்தை எதிர்பார்த்துத் தோரணவாயிலில் ஒளிந்திருந்த தாருவருமன், இயந்திர அமைப்பால் பொன் பூசிய மிகவும் பளுவான இரும்புக் குண்டுகளை உள்ளே மறைத்துத் தான் அமைத்து வைத்திருந்த தோரணத்தை அவன் தலையில் அறுந்து விழுமாறு செய்தான். அது விழு முன்பு அங்கு வேறொரு புதுமை நிகழ்ந்தது. இராக்ஷசனால் மிக்க பணவுதவி பெற்று அவனது கையாளாய்ச் சந்திர குப்தனைக் கொல்வதற்கென்றே வாளுடன் வந்த யானைப் பாகன், அதுவே தன் தொழில் திறத்தைக் காட்டச் சமயம் என்று கருதித், தான் சந்திரகுப்தன் என்று கருதிய வைரோசகனை வெட்ட வாளை ஓங்கினான். வைரோசகன் ஏறிவந்த மதகளிறு, தன்னுணர்வால் தனக்கு ஏதோ தீங்கு விளையப்போவதாய் எண்ணிச் சிறிது வேறு வழி யாகத் திரும்பி நடந்தது. அச்சமயத்தில் தாருவருமன் முயற்சியால் அறுந்து விழுந்த இயந்திர தோரணம், யானைப் பாகனாகிய வர்வரகன் என்பான் தலையில் விழுந்து, அவனை எமபுரி சேர்த்தது. அதுகண்டு தன்குறி தப்பியதாக எண்ணிய தாருவருமன், அவ்வைரோசகனைச் சந்திரகுப்தன்

என்றே மதித்துத் தன் கைவாளை ஓச்சி அவனது கழுத்தைத் துண்டித்துப் பிணமாக்கினன். அக்கணமே இருபுறமும் படைக்கலமேந்திச் சென்ற மெய்க்காவலர், கொடியவனை அத்தாருவருமனைத் தமது வாட்படைகளால் ஆயிரம் கண்ட துண்டங்களாக வெட்டி வீழ்த்தினர். இவ்வளவு செயல்களும் ஒரு இமைப்பொழுதில் நிகழ்ந்தன.

இவ்வளவு கொடுமைகள் நிகழ்ந்தமையைக் கண்ட நகர மாக்கள் 'யாரைப் பழிப்பது, யாரைப் புகழ்வது' என்று அறியாமல் திகைத்தனர். பின்பு சில தினங்களில் சாணக்கியர், நிமித்திகர் உதவியால் நன்னாள் ஒன்று பார்த்துச் சந்திரகுப்தனை நகரினுட் பிரவேசிக்கச் செய்தனர். அஃது, விசேஷமான ஆடம்பரங்கள் இன்றியே நிகழ்ந்தது. தோரண வாயிலில் இறந்தவன் வைரோசகனே என்பதை நகரமக்கள் அறிந்தும், அவன் கொலைக்குக் காரணராய் இருந்தவர் யார் என்று அறியவியலாமல் இருந்தனர். சந்திரகுப்தனும் சாணக்கியர் உதவியால், நாட்டுமக்கள் மனமகிழும் வண்ணம் அரசு செலுத்தி வந்தனன். இராக்ஷசன் சூழ்ச்சியால் சந்திரகுப்தனுக்கு மேலும் சில தீமைகள் விளையவிருந்தன. அவை சாணக்கியரால் அவ்வப்பொழுது உரிய தந்திரங்களால் விலக்கப்பட்டன.

சந்திரகுப்தனுக்கு அடிக்கடி மருந்துகள் கொடுத்து உடலைப் போற்றிவரும் பணிபூண்டிருந்த அரச மருத்துவனாகிய அபயதத்தன் என்பவன், ஒருநாள் இராக்ஷசன் தூண்டுதலால், நஞ்சூட்டிய ஒரு மருந்தைச் சந்திரகுப்தனுக்குக் கொடுக்க வந்தான். அதன் உண்மையை அவன் முகக் குறியால் அறிந்துகொண்ட சாணக்கியர், அவனையே அம்மருந்தை அருந்தச் செய்து, அவன் தன் குற்றத்துக்கு ஏற்ற

தண்டனை பெறுமாறு செய்தார். பின் ஒருநாள் சந்திரகுப்தன் உறங்குமாறு பள்ளியறைக்குச் செல்லும்போது, அவனுடன் சென்ற சாணக்கியர், அவ்வறையை நாற்புறமும் ஆராய்ந்து பார்த்து, அங்குள்ள ஒரு புறச்சுவரில் சிறியதோர் துவாரத்திலிருந்து சிற்றெறும்புகள் சோற்றுப் பருக்கைகளோடு வருவதைக்கண்டு அதிசயித்து, 'இங்கே நிலவறையிருக்க வேண்டும். அதில் மனிதர் பதுங்கியிருக்கவேண்டும்' என்று ஊகித்தறிந்து, மௌரிய புத்திரனை வேறொரு அறையிலே பள்ளிகொள்ளுமாறு செய்துவிட்டுத் தாம் ஐயமுற்ற பள்ளியறையைத் தீக்கிரையாக்கினர். அங்குப் பதுங்கியிருந்த கொடியோர் பலரும் வெளிவர வழியின்றித் தீயில் வெந்து அழிந்தொழிந்தனர். இங்ஙனம் நிகழ்ந்த கொடுமைகள் இன்னும் பல உண்டு. அவற்றால் எல்லாம் சந்திரகுப்தனுக்குத் தீங்கு நேரிடாமல் கண்ணை இமை காப்பதுபோல அவனைக் காத்துவந்த சாணக்கியர், வெகு விரைவில் அவன் செய்யும் அரசு முறையின் பெருமையால் நாட்டு மக்கள் அனைவரும் அவனைப் புகழ்ந்து பழைய அரசர்களை மறக்கும்படி செய்தனர்.

நிற்க. இராக்ஷசன் பக்கத்தைச் சார்ந்த சிலர் மௌரியனது சேவகருட் சிலரைத் தம வசப்படுத்த முயன்றுகொண்டிருந்ததை ஒற்றரால் அறிந்த சாணக்கியர், அச் சேவகர்களை மறைவாக அழைத்துத் தக்கவாறு போதித்து, மலைநாட்டுக்குச் சென்று மலயகேதுவுக்குத் துணைபுரிவதுபோல இருந்து சமயம் பார்த்துச் சந்திரகுப்தனுக்கு நன்மை விளைக்கத்தக்க செயல்களைச் செய்யுமாறு ஏவி அனுப்பினர்; நகரத்தினுள் இன்னும் பலர் சந்திரகுப்தனைப் பகைக்கக் கூடுமாதலால், அவர்களைக் கண்டுபிடிக்கும்படி ஒற்றர் பலரைப் பற்பல மாறுவேடங்களோடு நகரெங்கும் திரியச் செய்தார். இங்ஙனம் அவர் செய்த முயற்சிகள் பலவாம்.

215

## பத்தாம் அத்தியாயம்

## முத்திரை மோதிரம்

மகததேசத்தில் இங்ஙனம் அரசாட்சி நடைபெற்று வருகையில், ஒரு நாள் நிபுணகன் என்னும் பெயரினனான ஒற்றன் ஒருவன், சாணக்கியரிடம் வந்து கைகட்டி வாய் பொத்தி நின்று, அவர் முகக்குறிப்பறிந்து பின்வரும் செய்தியைக் கூறினன். "சுவாமி, தங்கள் கட்டளைப்படி யான் எமலோக வாதனைகளை விளக்கும் படத்தைக் காட்டிப் பிச்சை யெடுப்பவன்போல இந்நகரெங்கும் சுற்றித் திரிந்து பார்த்ததில், இப்பொழுது நம் அரசர்க்குப் பகைவராய் இருப்போர் மூவரே என்பதை அறிந்துகொண்டேன். அம் மூவருள் ஜீவசித்தி என்னும் சமணத்துறவி ஒருவனாவன். அவனே இராக்ஷசனது விருப்பத்திற் கிணங்க ஒரு விஷகன்னிகையை யாககுண்டத்திலிருந்து தோற்றுவித்து, நமக்குத் துணையாய் நின்ற பருவதேசரைக் கொன்ற பாவி யாவன்" என்று கூறிய அளவில், சாணக்கியர் "ஓகோ, ஜீவசித்தி யென்னும் பொய்ப்பெயர் புனைந்து இந்நகரத்திற் சஞ்சரித்து வருவோன் நம் உயிர் நண்பனாகிய இந்துசருமன் என்பதை இவன் எங்ஙனம் அறிவான்?" என்று தன்னுள் எண்ணிக்கொண்டு, அவ்வொற்றனை நோக்கி, "மற்றொரு பகைவன் யார்?" என்று வினவினார்.

நிபுணகன், "ஐயனே, மற்றொரு விரோதி அமைச்சரா யிருந்த இராக்ஷசர்க்கு மனமொத்த நண்பனாகிய சகடதாசன் என்ற கணக்கன் ஆவான்" என்றான். அதுகேட்ட விஷ்ணு சருமர், 'சகடதாசன் என்ற கணக்கன் எனக்கு ஒரு பொருட்டாகான். எனினும், பகைவனைச் சார்ந்தவனா யிருப்

பதால் அவனை அற்பனென்று அலட்சியமாக விட்டுவிட லாகாது.' என்று எண்ணிக்கொண்டு, அவ்வொற்றனை நோக்கி, "மூன்றும் பகைவன் யாவன்?" என்றனர். அவனும் "ஐய, இராக்ஷசர்க்கு உயிர்த்தோழனாகிய சந்தனதாசன் என்ற செல்வவந்தன் மூன்றும் பகைவனாக இருக்கலாமென் பது என் எண்ணம். ஏனெனில், இராக்ஷசர் இப்புஷ்பபுரியை விட்டு ஓடுங்காலத்தில், தமது மனைவி மக்களை மறைவாகக் காத்து வரும்படி இவனது மனையகத்தே விட்டுப்போ யிருக்கிறார் என்று தோன்றுகிறது. ஏனெனில் நான் எம லோகவாதனைப் படத்தைக் காட்டிக்கொண்டு நகர வீதிக ளிலே சுற்றி வருகையில், சந்தனதாசனது மாளிகையி லிருந்து ஒரு சிறு குழந்தை அவ் விநோதக்காட்சியைப் பார்க்க வெளியே வந்தது. அதைக்கண்ட ஒரு பெருமாட்டி, அவ்வீட்டின் உட்புறத்திலிருந்து விரைந்தோடி வந்து அப் பாலகனை எடுத்துக்கொண்டு உள்ளே சென்றனள். அவள் அங்ஙனம் குழந்தையை எடுக்குங் காலத்தில், அவளது அழ கிய கைவிரலிலிருந்து ஒரு முத்திரை மோதிரம் கீழே நழுவி விழுந்தது. அதனை யான் உடனே எடுத்து உற்று நோக்கு கையில், அதில் 'இராக்ஷசன்' என்ற பெயர் வரைந்திருக்கக் கண்டேன். ஆகையால் நான் அப்பெண்மணி இராக்ஷசர் மனைவியாய் இருக்கவேண்டும் என்று ஊகித்தேன். அம்முத் திரை மோதிரத்தையும் இங்கே கொணர்ந்துள்ளேன். பெற் றுக் கொள்வீர்களாக," என்று கூறி அதனைக் கொடுத்தான்.

மிக்க போர்வன்மையும், தோள்வலியும், அறிவின் உரமும், சூழ்ச்சித் திறமும், இராஜபக்தியும் ஒருங்கே படைத்த இராக்ஷசனை எங்ஙனமேனும் தம் வசப்படுத்தி மகதநாட்டு மன்னனாகிய சந்திரகுப்தனுக்கு அமைச்சனாக

அமர்த்தவேண்டும் என்று கருதியிருந்த சாணக்கியர், இங்ஙனம் அவனது கணையாழியைக் கண்ணுற் கண்டதும், அவனை தம் கையிற் சிக்கிக்கொண்டதாக எண்ணி, மிக்க மனமகிழ்ச்சியுடன் அம்முத்திரை மோதிரத்தை வாங்கி மிகவும் ஜாக்கிரதையாக வைத்துக்கொண்டனர்.

அவ்வமயத்திற் சந்திரகுப்தனால் அனுப்பப் பெற்ற வாயில் காப்பாளாகிய சோணேத்தரை என்பாள் சாணக்கியரிடம் வந்து, "சுவாமி, நமது சந்திரகுப்த மகாராஜா, காலஞ்சென்ற பருவதேசர் தரித்திருந்த பொன்னாபரணங்களைத் தக்க பிராமணர்களுக்குத் தானம் செய்ய விரும்புகின்றார். அவ்விஷயத்தில் தங்கள் கருத்தை அறிந்து வரும்படி என்னை அனுப்பியிருக்கிறார்" என்றனள். அது கேட்ட சாணக்கியர், "சோணேத்தரையே, அரசர் விருப்பப்படி தான தர்மங்கள் நடைபெறுவது எனக்குச் சம்மதமே. ஆயினும் பருவதகன் பூண்டிருந்த அணிகலன்கள் மிகச் சிறந்தவை யாதலால், அவற்றைத் தவத்தாற் சிறந்த வேதியர்க்கே அளிக்கவேண்டும். ஆதலின், அவற்றை ஏற்றுக்கொள்ளத் தகுதியுடையவர்களை யானே தெரிந்தெடுத்து அரசரிடம் அனுப்புகின்றேன். இச் செய்தியை நீ அங்குத் தெரிவிக்கலாம்" என்று கூறி அவளை அனுப்பிவிட்டார். பிறகு தமக்கு மிகவும் தெரிந்தவர்களும், தகுதியுடையவர்களும், நண்பர்களுமான விசுவாவசு முதலிய மூன்று பிராமண சகோதரர்களை அழைத்து, "நீவிர் மூவரும் இப்பொழுது நமது அரசரிடம் சென்று, அவர் உங்களுக்கு அளிக்கும் பொன்னணிகளைப் பெற்றுக்கொண்டு, பின்னர் வணிக வேடத்துடன் இராக்ஷசன் இருக்குமிடம் சென்று தக்க சமயத்தில் அவற்றை அவனுக்கு விற்றுவரக் கடவீர்" என்று கூறி அனுப்பினர்.

பின்பு சாணக்கியர் பின்வருமாறு எண்ணமிட்டனர்: "மலைநாட்டரசனது படைத்தலைவர்களுள் முக்கிய பதவி பெற்றிருக்கும் ஐந்து சிற்றரசர்கள் இப்பொழுது நம் பகைவனுயிருக்கும் இராக்ஷசனிடம் நட்புப் பூண்டிருக்கின்றனர் என்று ஒற்றரால் அறிந்தேன். அவர்கள் கௌலூத மன்னனை சித்திரவருமன், மலயவரசனை சிங்கநாதன், காஷ்மீரத்து இறைவனை புட்கராட்சன், சிந்து காவலனாகிய சிந்துசேனன், பாரசீக மன்னனை மேகநாதன் என்போர் ஆவர். இவர்கள் இப்பொழுது இராக்ஷசனிடம் மிக்க நட்புப் பூண்டிருப்பதால் நான் மௌரியனோடு பொய்க் கலகம் விளைத்துச் சிலநாள் விலகியிருக்கவேண்டும். இங்ஙனம் எங்களுக்குள் உண்டாகும் சச்சரவை அறிந்த இராக்ஷசன், தன்னிடம் அன்புகொண்ட அரசர்களோடு சந்திரகுப்தன் பக்கம் சேர முயல்வதற்கு அறிகுறியாக இராக்ஷசன் கைப்பட எழுதியது போன்ற ஒரு கடிதத்தை அமைக்க வேண்டும். எழுதவேண்டிய வாசகங்களை அமைத்துக் கொடுத்து, என் எழுத்து நன்றாய் இல்லாததால் நம் சித்தார்த்தகன் உதவியால் அந்தச் சகடதாசனிடம் சேர்த்து அவன் கைப்பட எழுதுவிப்பேன். அக்கடிதத்தில் உள்ள செய்தி இன்னார்க்கு இன்னார் எழுதியது என்று வெளிப்படாத வண்ணம் செய்வேன். அக் கடிதத்தையே சித்தார்த்தகன் உதவியால் மலயகேதுவின் கையிற் சேர்ப்பிப்பேன். அக்கடிதத்தில் உள்ள செய்தியைக் கண்ட மலயகேது இராக்ஷசனை மனமுற வெறுப்பான். துணைபுரிய முன்வந்த வீரரிடம் உள்ள நம்பிக்கையும் குறையும். இந்த நிலையில் அவனுடன் பொய்நட்புப் பூண்டு, மந்திரியாய் இருக்கும் பாகுராயணன் முதலிய வீரர்களால் அம்மலயகேதுவைச் சிறைப்படுத்தி, இராக்ஷசனையும் சந்திரகுப்த

னுக்கு அமைச்சனுக்கி வைத்து, நான் இப்பாரத்தை வகிப்பதிலிருந்து விலகிக்கொண்டு தபோவனம் செல்வேன்."

## பதினோராம் அத்தியாயம்
## சாணக்கிய தந்திரம்

எவ்வகை உபாயங்களிலும் வல்லவராகிய சாணக்கியர், தம்முள் முடிவுசெய்துகொண்ட வண்ணம் ஒரு கடிதத்தை எழுதிச் சகடதாசனிடம் வஞ்சமாக நெருங்கிப் பழகியிருந்த சித்தார்த்தகனிடம் கொடுத்து, அதனைச சகடதாசன் கைப்படத் தெளிவாக எழுதுவித்து, வெளிப்புறத்தில் தாமாகவே இராக்ஷசன் முத்திரையைப் போடுவித்து, மீண்டும் அச்சித்தார்த்தகனை நோக்கி, "அப்பா, சித்தார்த்த, சகடதாசன் இராக்ஷசனது தூண்டுதலால் இராஜத் துரோகம் செய்ய முயலுகின்றான் என்று நான் அவன்மீது குற்றஞ் சாட்டி, அரச சேவகரால் அவனைப் பற்றிவரச் செய்து கொலைக் களத்துக்கு அனுப்புகிறேன். உடனே நீ அங்குச் சென்று, மித்திரனது கொடுங்கொலையைச் சகியாது அக் கொலையாளிகளிடம் மிக்க சினங்கொண்டவன் போல நடித்து, அவர்கள் அந் நொடியிலேயே அங்கிருந்து ஓடிவிடுமாறு கண்சாடையால் தெரிவித்துவிட்டுச் சகடதாசனைக் கொலைக்களத்தினின்றும் விடுவித்து, இராக்ஷசனிடம் சென்று அவன் நன்றியறிவினாற் செய்யும் உபசாரத்தை ஏற்றுக் கொண்டிருப்பாய். அவன் உனக்கு அன்பினாற் கொடுக்கும் ஆபரணங்களையும் பெற்றுக்கொண்டு சிறிது காலம் அவன் அருகில் இரு. பின்னர் பகைவர் நம் நகரத்தை நெருங்கி வரும்போது, நீ செய்தற்குரிய செயல் இது

வாகும்" என்று அவனிடம் சில மறைவான சூழ்ச்சிகளையும் சொல்லி அனுப்பினர்.

அதன் பிறகு, ஜீவசித்தி யென்ற மறுபெயர் பூண்ட தமது ஆப்தமித்திரனுகிய இந்துசருமனையும் இராக்ஷசனிடம் அனுப்பிச சில சூழ்சசிகள் செய்யக் கருதியதால், அவனைப் பாடலிபுரத்தைவிட்டு வெளியேற்றக் கருதித் தமது சீடனுகிய சார்ங்கரவனை விளித்து, " அடா சார்ங்கரவா, நீ இப்பொழுது காலபாசிகன், தண்டபாசிகன் என்ற சேவகரிடம் சென்று, "ஜீவசித்தி என்னும் சமணத்துறவி, இராக்ஷசனது தூண்டுதலால் விஷகன்னிகையைப் படைத்து அவளைக் கொண்டு நமது நண்பராக வந்த பருவதேச மகாராஜரை விண்ணுலகுக்கனுப்பினன். ஆதலின் இந்நகரத்தார் எல்லோரும் அறிய ஊரை விட்டு விரட்டுங்கள்" என்று அரசன் ஆணை இட்டிருப்பதாகப் புகன்று விடுவாயாக," என்று கூறி அனுப்பினர்.

பின்னர், சாணக்கியர் தமது மாணுக்கருள் ஒருவனை அனுப்பிச் சந்தனதாசனை அழைப்பித்தனர். அவ் வணிகர் தலைவனும் 'நமக்கு ஏதோ பெருந்தீங்கு விளையப்போகிறது' என்ற எண்ணத்துடன் தன் நண்பர் சிலரிடம் இராக்ஷசன் மனைவி மக்களைப் பாதுகாக்கும் பொறுப்பை ஒப்பித்துவிட்டு, விரைவாக நடந்து சாணக்கியர்முன் வந்துநின்றான். அவனது வரவு கண்ட சாணக்கியர், அவனைத் தக்க உபசாரத்துடன் ஆதனத்தில் அமரச் சொன்னர். ஆயினும் அவ்வணிகர் கோமான் அங்ஙனம் புரிய அஞ்சித் தரையிலே உட்கார்ந்து கொண்டு, " தாங்கள் என்னை இங்கு இப்பொழுது வருவித்த காரணம் யாதோ?" என்று கேட்டான். அதற்கு விஷ்ணுசருமர், " ஐய, வணிகர்தலைவரே, இராஜத் துரோகி

யாகிய இராக்ஷசனது மனைவி மக்களை நீர் நுமது மனையகத்தில் மறைவாக உறைந்திருக்க இடங்கொடுத்துக் காப்பாற்றி வருவதாய் அறிந்தேன். அது உண்மையாய் இருக்குமாயின் இக்கணமே நீர் அவர்களை எம்மிடம் ஒப்பித்துவிடவேண்டும். இல்லாவிடில் உமது மனைவி மக்களைச் சிறைப்படுத்துவதுடன் உம்மையும் கொலைத் தண்டனைக்கு உள்ளாக்குவோம்" என்று கூறினர். அதற்கு உறுதிபெற்ற மனம் படைத்த வணிகிய அச்சந்தனதாசன் "ஐய, என்னிடம் என் நண்பர் அடைக்கலமாக வைத்துச்சென்ற அவரது மனைவி மக்களை நான் உம்மிடம் விட்டுவிடுவது தகுமா?" என்று பணிவுடன் கூறினன். சாணக்கியர் "அடா, வர்த்தகனே, அரசருக்குக் கேடு சூழ்ந்த ஜீவசித்தி யென்ற சமணத்துறவியும், சகடதாசன் என்ற கணக்கரும் பட்ட பாட்டை நீ அறியாயோ? ஆதலின், நீ உன் பெண்டுபிள்ளைகளுடன் உயிரோடு வாழ்ந்திருக்க விரும்பினுல், இராக்ஷசன் குடும்பத்தாரை இக்கணமே இங்கே அழைத்து வரவேண்டும்" என்று மீண்டும் சினத்துடன் கூறினர். அதற்கும் அஞ்சாத அவ் வணிகன், 'ஐய அந்தணரே, ஏன் இங்ஙனம் வீணில் என்னை அச்சுறுத்துகின்றீர்? எனது மனைவி மக்கள் சிறைப்படவும் நான் என் உயிரையே இழக்கவும் நேரிடினும் என்னிடம் அடைக்கலமாக ஒப்புவிக்கப் பட்டவர்களை ஒருபோதும் உம்மிடம் கொண்டுவந்து விடேன்," என்று துணிந்துரைத்தான்.

அது கேட்ட சாணக்கியர் மிக்க சினங்கொண்டு தம் மாணுக்கனை நோக்கி, "அடா சார்ங்கரவா, நீ துர்க்கபாலகன், விஜயபாலகன் என்னும் அதிகாரிகளிடம் சென்று, இவன் செல்வத்தையெல்லாம் அரசரது நிதிச்சாலையிற் சேர்ப்பித்து இவனது சுற்றத்தாரைச் சிறைப்படுத்தும்படி அரசர் ஆணை

பிறந்திருக்குமாறு தெரிவிப்பாய். மேலும் நான் இவன் செய்தியைச் சந்திரகுப்தனுக்குத் தெரிவித்து, இவனுக்குத் தூக்குத் தண்டனை விதிக்கும் வரையில் தக்க காவலுள்ள சிறைச்சாலையில் இவனை அடைத்துவைக்கும்படி அரச சேவகரிடம் கூறுக" என்றார். அம்மாணவகன் "அங்ஙனமே ஆகுக,' என்று கூறி வர்த்தகனுடன் அகன்றனன்.

பின்னர், அவன் சிறிது நேரத்தில் சாணக்கியரிடம் வந்து, "சுவாமி, சித்தார்த்தகன் என்ற நமது அரசசேவகன் கொலையாளிகளை வெருட்டிச் சகடதாசனைக் கொலைக் களத்தினின்று விடுவித்துக்கொண்டு போய்விட்டானும்" என்று கூறினன். அதைக் கேட்டதும் சாணக்கியர் மிக்க கோபம்கொண்டு, "அப்படியா! விரைவில் அவ்விருவரையும் பிடித்து வரும்படி பாகுராயணன் என்ற நமது போர் வீரனுக்குத் தெரிவிப்பாய்" என்றனர். அச்சீடன் உடனே வெளியிற் சென்று வெகு விரைவில் திரும்பிவந்து, "சுவாமி அவனும் எதிரிகளுடன்| சேர்ந்துகொள்ளத் துணிந்து இந் நகரை விட்டு ஓடிவிட்டானும்" என்றான்.

அச்செய்தியைக் கேட்ட விஷ்ணுசருமர், முன்னிலும் பன்மடங்கு அதிகமாக வெகுண்டு, "ஆகா, அவனும் அரசரைத் துறந்து அந்நியருடன் சேர்ந்துவிட்டானே? நல்லது, நீ விரைவிற் சென்று நமது படைத்தலைவர்களுக்கு இச்செய்தியைத் தெரிவித்து, அந்தத் துராத்மாவை உடனே பிடித்து வருமாறு சொல்க" என்றனர். அச்சீடன் அங்ஙனமே சென்று சிறிது நேரத்தில் மீண்டு வந்து, "சுவாமி, இவ்வநியாயம் எங்கு நடக்கும்? பாகுராயணன் சென்ற வழிக்கே அவன் நண்பர்களாகிய நம்முடைய மற்றப் படைத்தலைவர்களும் புறப்பட்டுப் போய்விட்டார்களாம்" என்று கூறினன்.

அச் செய்தியை அறிந்த சாணக்கியர் தம் எண்ணம் நிறைவேறியதாக அறிந்து மகிழ்ந்து, "எத்தனை படைவீரர்கள் எதிரி பக்கம் போய்ச் சேரினும் என்ன ? வெற்றி நமக்கே சார்ங்கரவ, இராஜ்யத் துரோகிகளாகிய இவ்வனைவரும் மலயகேதுவுடன் சேர்ந்துகொள்ளினும், யான் முன்போலவே என் அறிவு ஒன்றையே துணையாகக்கொண்டு நம் பகைவர் எண்ணங்களைக் கெடுப்பேன்" என்று கூறி, அவனை அனுப்பிவிட்டுத் தம் இருப்பிடம் சென்றார்.

## பன்னிரண்டாம் அந்தியாயம்

## போலிப் பிணக்கு

சந்திரகுப்த மன்னன் அரசச் செல்வத்தை அடைந்து மன நிம்மதியோடு வாழ்ந்திருந்ததால், ஒருநாள் "பாடலிபுர நகரஜனங்கள் அனைவரும், கௌமுதித் திருவிழாக் கொண்டாட வேண்டும்" என்று பறை சாற்றுவித்து, அங்ஙனம் குடிமக்கள் அவ்விழாவைக்கொண்டாடும் வைபவத்தைக் கண்டு களிக்க விரும்பித் தனது மாளிகை ஒன்றின் உப்பரிகையின் மீது ஏறி நாற்புறமும் பார்த்தான். எங்கும் திருநாளின்றி வெறுநாளாகவே இருந்தது. ஏனெனில் சாணக்கியர் அரசனோடு பொய்க்கலகம் விளைத்துப் பிரிந்து செல்வதற்கென்றே, "அவ்விழா இப்பொழுது இந்நகரத்தில் கொண்டாடப்படலாகாது" என்று பறை யறைவித்தார். மிக்க கோபம் உடையவரான சாணக்கியரது கட்டளையைக் கேட்ட நகரமாந்தர், அவரது குணத்தை அறிந்து அரசர் ஆணையை நிறைவேற்றாமல் இருந்தனர். இதை யறிந்து கோபங்

கொண்ட சந்திரகுப்தன், உடனே சாணக்கியரைத் தன்னிடம் அழைத்து வருமாறு ஒரு ஏவலாளை அனுப்பினான். சாணக்கியரும் சிறிதும் காலம் தாழ்க்காது அங்கு வந்தனர்.

அவர் தமக்குரிய ஆதனத்திலிருந்ததும், "சந்திரகுப்த, இப்பொழுது நீ என்னை எதற்காக வரவழைத்தனை?" என்று வினவினர். அதற்கு அவன், "ஐயனே, புண்ணியாத்துமாவாகிய தங்களைத் தரிசிக்கும் பாக்கியம் பெறவே அழைப்பித்தேன்" என்றான். சாணக்கியர், "அப்பா, உனது உபசார வார்த்தைகளால் உவப்பெய்தினேன். என்றாலும் அரசர்கள் தக்க காரணம் இன்றித் தங்கள் தலைமை உத்தியோகஸ்தர்களை வரவழைப்பதில்லை. ஆகையால், என்னை இங்கு அழைத்ததற்குரிய காரணத்தை அறிய விரும்புகிறேன்" என்று கேட்டார். அது கேட்டபின் ஒருவாறு மனம் துணிந்த சந்திரகுப்தன், "ஐயனே, இன்று கௌமுதித் திருவிழாக் கொண்டாடும்படி குடிமக்களுக்கு யான் ஆணை பிறப்பித்தேன். தாங்கள் அதைக் கொண்டாட வேண்டாம் என்று அடுத்த நிமிஷமே நகரெங்கும் பறை சாற்றுவித்து என் கட்டளையை மாற்றிவிட்டீர்கள். அரசரும் அமைச்சரும் இப்படி ஒற்றுமையாய் இருப்பின் அரசாங்கம் எப்படி நடக்கும்? தாங்கள் இவ்வாறு ஆணை பிறப்பித்தற்குத் தக்க காரணம் கூறவேண்டுகிறேன்" என்றான்.

சாணக்கியர் மறுமொழி கூறத்தொடங்கி, "சந்திரகுப்த, அரசியல் நூல்களுக்கிணங்க ஒரு நாட்டின் நோக்கம் நிறைவேறுதல் மூன்று வகையாம். அவை அரசர் முயற்சியாலும், அமைச்சர் முயற்சியாலும், அவ்விருவரது ஒன்று சேர்ந்த முயற்சியாலும் ஆகும். நினது அரசியலில் யாவும் என் வயப்பட்டிருத்தலால், நான் செய்து நிறைவேற்றுங்

க்காரியங்களைப்பற்றி நீ விசாரித்தறிய முயலவது பொருந்தாது. நான் செய்யும் செயல்களின் காரணங்கள் எனக்கே பயன் பெறல் தெரியும். வேறு யாரும் அறியார். அறிய முயன்றாலும் எளிதன்று" என்று கூறினர்.

அதுகேட்ட சந்திரகுப்தனுக்குக் கோபம் மிகுந்தது. அப்பொழுது இராக்ஷசன் நண்பருள் ஒருவனாகிய **தனகலசன்** என்போன் வைதாளிக வேடம் பூண்டு மௌரிய மன்னனை நெருங்கி நின்று, "மன்னர் மன்னனே, மதம் பொழிகின்ற வேழத்தை மிகவும் எளிதில் வெல்லவல்ல மிருகேந்திரனாகிய சிங்கம், எங்ஙனம் தனது முன்பற்களை இழக்கச் சகியாதோ, அங்ஙனமே உம்மைப்போன்ற அரசர் பெருமக்கள் தாம் இட்ட ஆணையை மீறிச் செல்லும் அதிகாரிகள் செய்கையைச் சிறிதும் பொறார். பிறரால் அவமதிக்கப் பெறாத ஆணையைப் பெற்ற அரசனே அரசன் என்னும் பெயர்க்குத் தகுதியுடையனாவான். ஆடையணிகளால் அழகு பெற்ற அளவில் ஒருவன் அரசன் ஆய்விடுதல் இயலாது. அரசரது பெருமையை அரசரே அறியவேண்டும்" என்று புகழ்ந்து பாடினான். உடனே அரசன் மனமுவந்து கஞ்சுகியை நோக்கி, "இப்புகழ்க் கவி பாடிய வைதாளிகர்க்கு இலக்ஷம் பொன் அளிக்கச் சொல்க" என்றான். அருகில் இருந்த சாணக்கியர் மிக்க சினத்துடன், "கஞ்சுகி, போகாதே நில். இங்ஙனம் தகுதியை ஆராய்ந்து பாராமலே ஒரு வைதாளிகனுக்கு இலக்ஷம் பொன் வழங்குவது வீண் செலவேயாகும்" என்று கூறித் தடுத்தார். அதுகேட்டு மனம் பொறாத அரசன், "ஐயனே, இங்ஙனம் நீங்கள் ஒவ்வொரு காரியத்திலும் குறுக்கே விழுந்து தடை செய்தால், அரசியல் எனக்குச் சிறையிருப்பே ஆகும்" என்று வருத்தத்துடன் கூறினான்.

சாணக்கியர், "சந்திரகுப்தா, இங்கு நான் கூறியவற்றின் நியாயத்தைப்பற்றிப் பிறகு விசாரிப்போம். என் அபிப்பிராயத்துக் கிணங்கி அரசியலை நிருவகித்து வருவதற்கு விருப்பம் இல்லையென்றால் எல்லாப் பொறுப்பையும் இன்று முதல் நீயே ஏற்றுக்கொண்டுவிடலாம். எனக்கும், மனவமைதி ஏற்படும்; தவஞ்செய்யச் சந்தர்ப்பம் வாய்க்கும். உன் மனக் கருத்தை உள்ளபடி வெளியிட்டுரைக்கலாம்" என்றார்.

அரசன், "பெரியீர், நீவிர் எனக்குச் செய்துள்ள நன்மையை நான் மறந்தேனல்லேன். ஆயினும் இங்ஙனம் என்னை அரசநிலையில் வைத்திருப்பது எனக்குத் திருப்தியில்லையென்றே கூறிகிறேன். என் பொறுப்பை நானே ஏற்றுக் கொள்கிறேன். இனி உங்கள் விருப்பம் போலச் செய்யலாம்" என்றான்.

சாணக்கியர், "மிக்க சந்தோஷம். நான் விடைபெற்றுக் கொண்டேன், இதோ புறப்பட்டேன்" என்றனர். அரசன் சிறிது நேரம் அவரைத் தடுத்து நிறுத்தி, "நீவிர் போய் வரலாம். ஆயினும், கௌமுதித் திருவிழாவை எனது கருத்து இன்னதென்று அறியாமல் தடுத்து நிறுத்தியதற்குக் காரணம் தெரிவித்துப் போகவேண்டுகிறேன்" என்று கூறினன்.

சாணக்கியர், உடனே அசலன் என்னும் கணக்கனிடம் பத்ரபடன் முதலிய சேனாதிபதிகளைக்கொண்டு முன்பே தாம் எழுதுவித்து வைத்திருந்த ஒரு சமாதான உடன் படிக்கையைக் கொணரச்சொல்லி, அதை அரசன் கையிற் கொடுத்தார். அக்கடிதத்தை அரசன் பிரித்துப் பார்க்கையில் அதில் பின் வருமாறு எழுதப்பட்டிருந்தது :

" சந்திரகுப்த மகாராஜனது படைத் தலைவர்களாகிய கீழே கையொப்பமிட்ட நாங்கள் எல்லோரும் ஒன்றுகூடி,

எம் அரசனாகிய சந்திரகுப்தனைத் துறந்து மலயகேது மன்னனைச் சார்ந்து பணி பூண்பதாகச் செய்துகொண்ட உடன்படிக்கை யாதெனில், நாங்கள் எல்லோரும் இனி எப்பொழுதும் மலயகேது மகாராஜனுடைய காரியத்தில் மிக்க கவனம் உடையவர்களாய் இருப்போமாக." அக்கடிதத்தில் பத்ரபடன் முதலானோர் கையொப்பமும் இருந்தது.

அதனைப் படித்துப் பார்த்த அரசன் சாணக்கியரை நோக்கி, "அவர்கள் இங்ஙனம் என்னிடம் வெறுப்புக் கொண்டு விரோதியிடம் போய்ச் சேர்ந்து கொள்வது ஏன்?" என்று விசாரித்தான். சாணக்கியர் அதற்குப் பொருத்தமான பல காரணங்களைக் கூறி, "இங்ஙனம் மலயகேது தன் தந்தை இந்நாட்டிற் கொலையுண்டதால் மிக்க கோபங் கொண்டு நமது போர்வீரர் அநேகரைத் தன் வயமாக்கி இராக்ஷசனது ஆலோசனையின் வன்மையால் பெரும்படை திரட்டி நம்மை எதிர்த்துப் போர்புரிய முயன்று கொண்டிருக்கையில், நாம் நமது நாட்டைக் காத்தற்குரிய முயற்சிகள் புரியாமல், இச்சமயத்திலே திருவிழாக் கொண்டாடிக் களித்திருப்பது தகாது என்ற கருத்தைக்கொண்டே யான் உனது ஆணைக்கு மாறாகக் கட்டளை பிறப்பித்தேன்" என்று கூறினர். சந்திரகுப்தன், "அங்ஙனமாயின், இவ்வளவு துன்பங்களும் தோன்றக் காரணனாகிய மலயகேது, தனது தந்தையை யிழந்து தடுமாறி நமது கையில் அகப்பட்டிருந்த காலத்தில் இங்கே சிறைசெய்யப் படாதது ஏன்?" என்று கேட்டான். சாணக்கியர், "அப்பொழுது அவனை அங்ஙனம் நாட்டுக்குப் போக விடாமற் சிறைசெய்திருப்போமாயின், அவனது தந்தையைக் கொல்வித்தவர் நாமே என்று பழி பூண்டிருப்போம். பொய்ந் நட்புப் பாராட்டி அப்பொழுதே அவனை மலை

நாட்டுக்கு அனுப்பாது இங்கே வைத்திருந்திருப்போமாகில், அவன் தந்தையிடம் நாம் வாக்களித்திருந்த வண்ணம் அவனுக்கு நம் அரசிற் பாதியைக் கொடுக்கக் கடமைப்பட்டிருக்கிறோம். இவ்விரண்டு குறைகளையும் நீக்கும் பொருட்டே அவனைத் தீங்கின்றித்தன்னோடு போய்ச்சேருமாறு அனுப்பினேன் " என்று விளக்கிக் கூறினர்.

அரசன், "நல்லது, இஃது இருக்க, விஷகன்னிகையாற் பருவதகனைக் கொன்றான் என்ற குற்றத்துக்காக நமது பகைவனாகிய இராக்ஷசனை அப்பொழுதே பிடித்துச் சிறையிலிட்டு, உயிரை வாங்காது நமது நகரை அகன்று அயல் நாட்டு அரசர்களின் உதவிகொண்டு அவனே நம்மை எதிர்த்துப் போராட வரும்படி ஏன் விட்டீர்கள்? என்று கேட்டனன்.

சாணக்கியர், " சந்திரகுப்த, இராக்ஷசனை அங்ஙனம் சிறையிலிட்டிருப்பின் அவன் நெடுங்காலமாக நந்தரிடம் அன்பு பூண்டு பழகியவன் ஆகையாலும், மிக்க தீரமும் வீரமும் புத்திகூர்மையும் வாய்ந்தவன் ஆகையாலும், இந்நகரத்தினுள் தன்னிடம் அன்புடையவர்க்கெல்லாம் மிக்க பொருட்குவியல்களைக் கொடுத்துத் தன் வயப்படுத்தித் தன் யுக்தி பலத்தால் நம்மைச் சேர்ந்தவர் மனத்தையும் கலைத்துச, சிறையிலிருந்து வெளியேறி, நம்முடன் எதிர்த்து, நமது படைகளையும் வசப்படுத்திக்கொண்டு போர்புரிந்து உயிரை இழந்தாலும் இழப்பனேயன்றிச, சிறையினுள் அடங்கி இரான். அன்றியும் அவனைப்போன்ற இராஜபக்தியும், விசால புத்தியும், அபார சக்தியும், எவர்க்கும் அறிய இயலாத சூழ்ச்சித் திறமும் வாய்ந்த மந்திரி ஒருவன் இவ்வுலகில் எவ்வரசர்க்கும் வாய்ப்பது அரிது. ஆதலின், நாளடைவில் தக்க

உபாயங்களால் அவனை நம் வசப்படுத்தி இவ்வரசுக்கு மந்திரியாக்கக் கருதியிருக்கிறேன். ஆகையால் அவனை இப்பொழுது நம் நகரினின்று நீங்கி ஓடியொளியவிட்டேன்" என்றனர்.

அரசன், "ஆம் நீங்கள் கூறுவது உண்மையே. அமைச்சராகிய இராக்ஷசர் எவ்வாற்றாலும் உங்களைக் காட்டிலும் உயர்ந்தவரே" என்றனன்.

அதுகேட்ட சாணக்கியர் மிக்க கோபம்கொண்டு, "அடா, என்ன சொன்னாய்? நீ முன் இருந்த நிலையையும் இப்பொழுது என்னால் அடைந்திருப்பதையும் மறந்தாய் போலும். நீ வரவர என்னை உன் அடிமையென்றே மதித்துப் பேசுகின்றாய். இராக்ஷசனையே நீ மந்திரியாக அமர்த்திக் கொள்வாயாக. இதோ யான் வெளியேறுகின்றேன்" என்று கூறிப் புறப்பட்டார்.

அரசனும் தன் கஞ்சுகியை நோக்கி, "இன்று தொடங்கிச் சந்திரகுப்த மகாராஜன் சாணக்கியரை அவர் பதவியிலிருந்து விலக்கி, இராஜ்ய காரியங்கள் யாவற்றையும் தானே பார்ப்பதாக நகர ஜனங்களுக்கு அறிவிக்கச் செய்க" என்று கூறி அரண்மனை புக்கனன். சந்திரகுப்தனும் சாணக்கியரும் இங்ஙனம் சினந்து பிரிந்ததும் ஒரு சூழ்ச்சியே யென்பது பின்னர் வெளியாகும்.

## பதின்மூன்றும் அத்தியாயம்
## இராக்ஷசனும் மலயகேதுவும்

பாடலிபுரம் நீங்கி, மலைநாடு நோக்கிச்சென்று மலய கேதுவை அடுத்து மந்திரிபதவி ஏற்றிருந்த இராக்ஷசன், தனது விடுதியில் ஒருநாள் பின்வருமாறு தனக்குள் எண்ண மிடுவானாயினன் :

"யான் புஷ்பபுரியினின்று மறைவாக வெளிப்பட்டு வருங்காலையில், எனது மனைவி மக்களைத் தனது மாளிகையில் நன்கு போற்றிக் காத்துவரும்படி எனது நண்பருட் சிறந்த சந்தனதாசனுக்குச் சொல்லிவந்தேன். அன்றியும் சந்திர குப்தனை விஷம் முதலியவற்றாற் சதிசெய்து கொல்லும்படி அபயதத்தன் முதலிய அந்தரங்கச் சேவகர்களை ஏவியிருந் தேன். என் நண்பன் சகடதாசனை அவர்களுக்கு வேண்டு மளவு பணம் உதவுமாறு கூறியிருந்தேன். மேலும் பகைவர் களுடைய உளவுகளை அடிக்கடி அறிந்து, அவர்களைச் சேர்ந்த வர்களை மித்திரபேதம் செய்து கலைக்கும்படி ஜீவசித்தி முத லிய நண்பரிடம் சொல்லியிருந்தேன். இன்றுவரை, அங்கு என்ன நடந்துள்ளன என்பது விளங்கவில்லை. நான் அனுப் பிய ஒற்றர்கள் இன்னும் வந்திலர். இருப்பினும் இனி மனந் தளராது மலயகேதுவை முன்னிறுத்திப் பல மன்னர் துணை யோடு வெகு விரைவிலே நான் பாடலிபுரம் சென்று சந்திர குப்தனையும் அவனைச் சார்ந்தோரையும் கொன்று வேர றுத்து வெற்றி பெறுவேன் என்பதிற் சிறிதும் ஐயமில்லை."

இங்ஙனம் அவன் தனக்குள் எண்ணமிட்டுக் கொண் டிருக்கையில், மலயகேதுவின் கஞ்சுகி அங்கு வந்து "ஐயா..

அமைச்சர் தலைவரே, நமக்குரிய மன்னர்களாகிய நவநந்தர்கள் மாண்டனர் என்ற மனத்துயரத்தால், இதுகாறும் உமது ஆபரணங்களை நீர் அணியாதிருந்தீர். இனியும் அங்ஙனம் இருப்பதைக் காண என் மனம் சகியாது. ஆதலின், யான் இதுகாறும் என் மேனியிற் பூண்டிருந்த இவ்வணிகலன்களை ஏற்றுக்கொண்டு பூணவேண்டும் என்று எம் மன்னர் என் வசம் அளித்தனர். இதோ இவைகளை அன்புடன் ஏற்றுக் கொள்ள வேண்டும்" என்று மொழிந்து அந்த இரத்தினாபரணங்களை இராக்ஷசனிடம் கொடுத்தனன். அவனும் அவ்வணிகளை ஏற்றுக்கொண்டு கஞ்சுகிக்கு விடைகொடுத்து அனுப்பினன்.

பிறகு சில நிமிடங்களில் பாடலிபுரத்திலிருந்து பகைவர் மனக் கருத்துக்களை அறிந்து வருமாறு ஆணைபெற்றுப் போயிருந்த **விராதகுப்தன்** என்னும் சேவகாரன் அங்கு வந்து இராக்ஷசனைக் கண்டு வணங்கினன்.

**இராக்ஷசன்:**—அப்பா, விராதகுப்தா, யான் புஷ்பபுரியைவிட்டு விலகிய நாள்முதல், இன்றுவரை, அங்கு நடந்தவற்றையெல்லாம் நீ கண்டவாறு ஒன்றையும் விடாமற் கூறுக.

**விராதகுப்தன்:**—அமைச்சர் தலைவரே, அங்கு நிகழ்ந்தவைகளெல்லாம் உமதுமனத்தை வருத்தத் தக்க செயல்களே. தாருவர்மன் என்னும் சிற்பியும் வர்வரகன் என்னும் யானைப்பாகனும், நள்ளிரவில் நகரப் பிரவேசம் செய்வதற்காகப்பட்டத்து யானையின்மீது பவனிவந்த வைரோசனைச் சந்திரகுப்தன் என்று கருதிக் கொல்ல முயன்று தாமே மாண்டனர். அபயதத்தன் என்னும் வைத்தியன் சந்திரகுப்தனுக்காகச் சித்தப்படுத்திய விஷத்தைச் சாணக்கியர் சூழ்ச்சியால் தானே உண்டு மரித்தான். சந்திரகுப்தனது பள்ளியறையில் மறைந்திருந்த

சேவகர்களும தீக்கிரையாயினர். உமது நண்பராகிய ஜீவ சித்தி என்ற சமணத் துறவியும், விஷகன்னிகையைப் படைத்துப் பருவதேசரைக் கொன்ற குற்றத்துக்காக நாடு கடத்தப்பட்டார். தாருவர்மன் முதலிய கொலைஞர்களுக் குப் பொருளுதவி செய்தான் என்று குற்றஞ் சாட்டிச் சகட தாசனும் கொலைத்தண்டம் விதிக்கப்பட்டான். அன்றியும் வணிகர் தலைவனாகிய சந்தனதாசன் மனையில் உமது மனைவி மக்கள் மறைந்திருக்கும் செய்தியை எங்ஙனமோ அறிந்த சாணக்கியர், அவனை வருவித்து உமது குடும்பத்தைத் தம் மிடம் ஒப்பிக்குமாறு கேட்டு, அவன் அங்ஙனம செய்யாத தால், மிக்க சினங்கொண்டு அவனைக் குடும்பத்தோடு சிறை யிட்டிருக்கின்றனர். சந்தனதாசன் கொலைத் தண்டனைக்குள் ளாவான் என்றே தெரிகிறது. அவன் செல்வமெல்லாம் சாணக்கியர் ஆணையால் இராஜாங்கத்தைச சேர்ந்துவிட்டன. இவ்வளவு துன்பம் வந்தும் அச்சந்தனதாசன் உமது மனைவி மக்களைப் பகைவர் கண்களுக்குப் புலப்படுத்தாது, மிக்க சாமர்த்தியமாய்த் தனது நேசரைக்கொண்டு காப்பாற்றி வரு கின்றான். இவ்வளவு துக்கச செய்திகளைக் கேட்ட உமது செவிகளுக்கு இந்த ஒன்றே இன்பம் விளைப்பதாய் இருக்கும்.

இராக்ஷசன் :—ஹா! என்னே! என்னே! விதியின் வலி மை? நான் எவ்வளவு முயன்றும் ஒன்றும் பலிக்கவில்லையே. நேற்றுத் தோன்றிய சாணக்கியன் நினைப்பது எல்லாம் நிறை வேறுகின்றது. என் நண்பருள் ஒருவன் உயிர் இழந்தான்; மற்றொருவன் உயிரிழக்கும் நிலையில் தன் மனைவி மக்களோடு சிறைப்பட்டிருக்கிறான். அங்கு எனது நண்பர்களுக்கு உதவி புரிவோர் ஒருவரும் இல்லையே. இக்கொடுமைக்கு நான் என்

செய்வேன்? கடவுளே எதிர்நின்றால் மனிதன் என்ன செய்யக்கூடும்?

அவ்வமயத்தில் சகடதாசனும் சித்தார்த்தகனும் புஷ்பபுரியிலிருந்து வந்து இராக்ஷசனை வணங்கினர். இறந்து ஒழிந்தான் என்று தான் எண்ணியிருந்த சகடதாசன், இங்ஙனம் தக்க துணையோடு தன்னிடம் வரக் கண்ட இராக்ஷசன் மிக்க அதிசயமும் மகிழ்ச்சியும் கொண்டான்; அவனை அன்போடு தழுவிக்கொண்டு, "அன்ப, சகடதாச, கொடிய நெஞ்சினனாகிய சாணக்கியன் என்னும் காலன் கையிற் சிக்கிய நீ எங்ஙனம் உயிருடன் இங்குற்றனை?" என்று கேட்டான். அவன் அருகில் இருந்த சித்தார்த்தனைச் சுட்டிக்காட்டி, "எனது உயிர்த்தோழனை இவனால் காப்பாற்றப்பட்டேன்" என்று நடந்த விஷயங்களைக் கூறினான். சித்தார்த்தகன் அப்பொழுது ஒன்றும் கூறாது மௌனம் சாதித்தான். தன் நண்பனுக்காக அவன் இயற்றிய பேருதவியை எண்ணி யெண்ணி மனமுருகிய இராக்ஷசன், அவனுக்கு மலயகேதுவிடமிருந்து தான் பெற்ற பொற்பூண்களைப் பரிசாக அளித்தான்.

சித்தார்த்தகன் அவற்றைப் பணிவுடன் ஏற்றுக்கொண்டு, தனது தலைவராகிய சாணக்கியர் தன்னிடம் தெரிவித்திருந்த யுக்தியை மனத்தில் நினைந்து இராக்ஷசனை நோக்கி, "அமைச்சர் தலைவரே, யான் இப்பொழுது இவ்வூருக்குப் புதிதாய் வந்தவனாதலின், நீர் அன்புகூர்ந்து எனக்கு அளித்த பெரும் பரிசாகிய இவ்வணிகலன்களைக் காப்பாற்றி வைத்துக்கொள்ள என்னால் இயலாது. ஆகையால், இவற்றை ஒரு முடிப்பில் கட்டி முத்திரித்து உமது நிதிச்சாலையிலேயே சிறிது காலம் வைத்திருந்தால், எனக்கு வேண்டும்போது பெற்றுக்கொள்கிறேன்" என்று கூறி அவ்வாபரணங்களுடன்

களுடன் தான் கொணர்ந்த முத்திரை மோதிரத்தையும் கொடுத்தான்.

அக்கணையாழி தன்னுடையதாக இருப்பதைக் கண்டு அதிசயித்த இராக்ஷசன், "சித்தார்த்தக, இந்த முத்திரை மோதிரம் உனக்கு எங்ஙனம் கிடைத்தது?" என்று வினவினன். அதற்கு அவன் "சுவாமி, சந்தனதாசனது மாளிகை வாயிலில் யான் இதனைக் கண்டெடுத்து வந்தேன்" என்றான். இராக்ஷசன் அதுகேட்டு அதிசயித்து, 'ஓகோ, யான் பாடலிபுரத்திலிருந்து புறம்படும்போது எனது பிரிவுக்கு ஆற்றாத என் மனைவியின் கைவிரலில் யான் அணிந்துவந்த மோதிரமன்றோ இது?' என்று தனக்குள் எண்ணிக்கொண்டு, தன் உள்ளக் கருத்தை வெளியிட மனமின்றிச் சித்தார்த்தகனை நோக்கிச் "செல்வர் மனைவாயில்களில் இத்தகைய பொற்பூண்கள் விழுந்துகிடப்பது இயல்பே. இது உனக்கு அங்கே அகப்பட்டது போலும்" என்று கூறினன்.

அப்பொழுது சகடதாசன் சித்தார்த்தகனை நோக்கி "அன்ப, இம்மோதிரத்தை நீ இராக்ஷசரிடம் அளிப்பாயா யின் அவர் உனக்கு இதனினும் விலையுயர்ந்த பல இரத்தினாபரணங்களைப் பரிசாகக் கொடுப்பார்" என்றனன். அது கேட்ட சித்தார்த்தகன், "இதனை அவர் என்னிடம் பெற்றுக்கொள்வதே எனக்குப் பெரும் பரிசாகும்" எனப் புகன்று அதனை இராக்ஷசன் கையிற் கொடுத்தனன். அவனும் அதனை மகிழ்ச்சியுடன் பெற்றுக்கொண்டு, சகடதாசனை நோக்கி, "நண்ப, இச் சித்தார்த்தகன் விருப்பப்படி, அவனுக்கு யான் அளித்த அணிகலன்களை ஒரு கிழியிற் பொதிந்து எனது முத்திரையிட்டு நமது நிதிச்சாலையில் வைத்திருந்து, மீண்டும் அவன் கேட்கும் காலத்தில் எடுத்துக்

கொடுப்பாயாக. அன்றியும் இனி நீ நடத்தும் காரியங்களில் இம் முத்திரையை உபயோகித்து வருவாயாக" என்று கூறிக் கொடுத்தான். சகடதாசனும் அதற்கு உடன்பட்டான். சித்தார்த்தகன், "ஐயனே, சாணக்கியனை வெறுத்து விலகிவந்த எனக்கு, இனி நம் நாட்டில் நுழைய வழியில்லையாதலால், இங்கேயே உமது அடிக்கீழ்க் குற்றேவல் புரிந்திருக்க ஆணை பிறப்பித்தருள வேண்டுகிறேன்" என்று தாழ்ச்சியுடன் கூறினன். அம்மொழிகளைக் கேட்டு மனமகிழ்ந்த இராக்ஷசன், சாணக்கியன் பக்கத்திலிருந்து வெறுப்புக்கொண்டு தன்னிடம் வருவோரையெல்லாம் தான் ஆதரிப்பது, தனக்கு நன்மையே தரும் என்று துணிந்து, அவனை நோக்கி, "உன்னை இங்கேயே ஒரு பதவியில் அமர்த்தி வைக்கவேண்டும் என்ற எண்ணம் எனக்கும் இருந்தது. ஆயினும் உன் கருத்தை அறிந்தே வேண்டுவன செய்யலாம என்று எண்ணியிருந்தேன். இப்பொழுதே என் மனம் குளிர்ந்தது" என்று உரைத்து, அவனைச சகடதாசனுடன் அவனுக்கென்று அமைந்திருந்த உறைவிடத்திற்குச செல்லுமாறு அனுப்பினன்.

இவ்வளவு அதிசயங்களையும் கண்டு வியப்புற்று அங்கு நின்றுகொண்டிருந்த ஒற்றனாகிய விராதகுப்தன், திரும்பவும் இராக்ஷசனை நோக்கி, "ஐயனே, இபபொழுது சந்திரகுப்தனுக்கும் சாணக்கியனுக்கும் அரசாங்க நிர்வாக விஷயமாகச் சில சசசரவுகள் விளைந்திருப்பதாக அறிந்தேன். சாணக்கியனே சந்திரகுப்தனுடன் மனம் வேறுபட்டுப் பிரிந்து சென்றான் என்றும் கேள்வியுற்றேன்" என்றான். இச்செய்தியைக் கேட்ட இராக்ஷசன் களிகூர்ந்து, "நீ சொல்லிய எல்லாச செய்திகளிலும் இதுவே சிறந்தது. இனி நம் எண்ணம் விரைவில் நிறைவேறும்" என்று கூறி அவனைப் பாராட்டி அனுப்பினன்.

பின்பு சிறிது நேரத்தில் சகடதாசனால் அனுப்பப் பெற்ற பணியாளன் ஒருவன் இராக்ஷசனிடம் வந்து, "சுவாமி, யாரோ சில வியாபாரிகள் மிகவும் விலையுயர்ந்த இவ் வாபரணங்களை விலைப்படுத்துமாறு இங்கே கொண்டுவந் திருக்கிறார்களாம். இவை மிக்க வேலைப்பாடுள்ளனவாய் இருப்பதால், நாம் இவற்றை வாங்கிக்கொள்வது நலமாகும் என்று சகடதாசர் தெரிவிக்கச் சொன்னார்" எனப் புகன்று ஆபரணங்களையும் கொடுத்தான். அவற்றைப் பார்த்து மதிப் பைச் சோதித்தறிந்து மகிழ்ந்த இராக்ஷசன், உடனே அவைகளை விலைக்குப் பெறும்படி சகடதாசனுக்குச் சொல்லி அனுப்பினான்.

இதுநிற்கச் சாணக்கியர் சூழ்ச்சியாற் புஷ்பபுரியைத் துறந்துவந்த பாகுராயணன், பத்திரபடன் முதலிய போர் வீரர்கள், மலயகேதுவிடம் வந்து சேர்ந்துகொண்டனர். ஜீவ சித்தியென்னும் சமணத்துறவியும் இராக்ஷசனிடம் வந்து சேர்ந்தான். பாகுராயணன் முன்னே பேருதவி புரிந்தவன் என்ற உரிமையால் மலயகேதுவுக்கு உற்ற தோழனாயினன்.

இங்ஙனம் மகத நாட்டவர் பலர் மலைநாட்டிற் புகுந்து, 'இராக்ஷசனைச் சூழ்ந்து சேவகம் செய்துவருகையில், ஒரு நாள் மலைநாட்டு மன்னனாகிய மலயகேது, மந்திரி இராக்ஷ சன் தலை நோயால் வருந்துகின்றான்' என்று கேள்வியுற்றுப் பாகுராயணனுடன் அவனைக் காணவந்தான். அப்பொழுது இராக்ஷசன் **கரபகன்** என்ற ஒற்றனிடம் புஷ்பபுரியின் செய்திகளைப் பற்றிப் பேசிக்கொண்டிருந்தான். ஓர் மறை விடத்தில் ஒளிந்திருந்த மலயகேது, அங்கு நிகழும் செய் தியை மிகவும் கவனமாகக் கேட்டனன்.

அப்பொழுது கரபகன் "ஐயனே, யான் புஷ்பபுரி சென்று தமது கட்டளையை நிறைவேற்றி வந்தேன். இப்

பொழுது அரசனுயிருக்கிற சந்திரகுப்தன் நந்தர்களின் நாசத்தால் மனம் வருந்திய நகரவாசிகளை மகிழ்விக்குமாறு சந்திரிகோற்சவம் என்ற திருவிழாவைக் கொண்டாடுமாறு நகரெங்கும் பறை சாற்றுவித்தான். அதனை அறிந்த சாணக்கியன் அங்ஙனம் செய்தல் கூடாது என்று அரசன் ஆணைக்கு மாறாக வேறொருவனைக் கொண்டு பறை சாற்றுவித்தான். அவ்விழா சாணக்கியன் எண்ணிய வண்ணம் நடைபெறாதொழிந்தது. அதனால் வெகுண்ட சந்திரகுப்தன், மந்திரியாயிருந்த சாணக்கியனை மிகவும் நிந்தித்து அப்பதவியிலிருந்து விலக்கிவிட்டு, இப்பொழுது தானே சுயாதிகாரம் செலுத்தி வருகின்றனன்" என்று இராக்ஷசனிடம் கூறினன்.

இராக்ஷசன் அச்செய்தியைக் கேட்டு மனம் பூரித்துத் தன்னருகிலிருந்த நண்பனாகிய சகடதாசனை நோக்கி, "நண்ப, இனிச் சந்திரகுப்தன் என் கையிற் சிக்காது தப்ப வழியில்லை. சாணக்கியன் உதவியை என்று இழந்தானோ, அன்றே அவனுக்குக் கேடுகாலம் கிட்டியது," என்று கூறினன்; பின்பு கரபகனுக்கு விடை கொடுத்தனுப்பினான். சகடதாசனும் விடைபெற்றேகினன்.

அப்பொழுது மலயகேது அங்கடைந்து, " அமைச்சர் தலைவரே, தலைநோய் நீங்கிச் சுகமாய் இருக்கின்றீர்களா ? " என்று வினவினன். அதற்கு இராக்ஷசன், "என் வாய்மொழி பொய்படாவண்ணம் உமது கையில் மகத இராஜ்யத்தைக் கொடுத்து, மலைநாட்டுக்கும் மகதநாட்டுக்கும் நீர் ஒருவரே அரசர் என்று மகுடாபிஷேகம் செய்த பிறகன்றோ என் தலைநோய் தீரும்?" என்று முகமலர்ச்சியோடு கூறினன். அதுகேட்ட மலயகேது, " இராக்ஷசனை அமைச்சராகப் பெற்ற அரசர்க்குச் செய்தற்கரிய செயலும் இருக்குமோ? நமது

படைகள் எல்லாம் திரண்டிருக்கின்றன. நாளைக்கே போர்க்குப் புறப்படுவோம்" என்றான். இராக்ஷசன் "அங்ஙனமே ஆகுக" என்று கூறி, ஜீவசித்தியை அழைத்துப் போர்க்குப் புறப்பட ஒரு நன்னாள் பார்த்துச் சொல்லும்படி கேட்டான். அவன், "பௌர்ணிமை யன்று மாலைக்காலத்திற் புறப்படலாம்" என்றான். இராக்ஷசன் அந்நாள் நன்னாளாயிராது என்று எண்ணி, "ஜீவசித்தியே, வேறு சில சோதிடருடன் கலந்து இன்னும் நல்ல முகூர்த்தமாகப் பார்த்துச் சொல்லும்" என்றான்.

ஜீவசித்தி அதுகேட்டுக் கடுஞ்சினங்கொண்டு இராக்ஷசனிடம் தான் செய்தற்கிருந்த பணிகள் எல்லாம் நிறைவேறிவிட்டதால் "சோதிடம் வல்லாராகிய வேதியரை நீயே வரவழைத்துக் கேட்டுக்கொள்" என்று கூறி விலகிச் சென்றனன்.

பின்பு இராக்ஷசன் மலயகேதுவை அவனுக்குத் துணையாக வந்த பல அரசரோடும் அவரவர்களுக்குரிய பெரும் படைகளோடும் ஒரு நன்னாளிலே போர்க்குப் புறப்படச் செய்து, பாடலிபுரத்தை நெருங்கி, அருகிலிருந்ததோர் வெளியிடத்திற் படைகளுடன் இறங்கிப் பாசறையில் தங்கியிருந்தான்.

# பதினைன்காம் அத்தியாயம்

## மலயகேதுவின் பாசறை

புஷ்பபுரியை நெருங்கி வந்த பிறகு மலயகேதுவின் மனத்திற் பலவித எண்ணங்கள் எழுந்தன. சந்திரகுப்தன் சாணக்கியனை அகற்றி விட்டதால் நந்தமரபினரிடம் நெடுங் காலமாகப் பணி பூண்டிருந்த இராக்ஷசன், ஒருக்கால் நந்தர் வழியில் வந்த மௌரியனிடம் இனிமேற் போய்ச் சேர்ந்து கொள்ளக் கருதுவானே என்று ஐயமுற்றான். அருகில் இருப்பவர் பலர் புஷ்பபுரி வாசிகளாகவே இருந்தது, அச்சமயத்தில் அவன் மனத்துக்கு வெறுப்பை விளைத்தது. பாகுராயணனிடம் தன் தந்தை உயிரோடிருந்த காலத்திலிருந்தே சிறந்த நட்புப் பூண்டிருந்தானதலால், அவனிடத்தில்மட்டும் பூரண நம்பிக்கை கொண்டிருந்தான். அதனால் அவனை அழைத்து, "நண்ப, இனிப் பாடலிபுரம் நெருங்கி விட்டதால் இன்று தொடங்கி நமது பாசறையை அகன்று வெளியே செல்பவர் எவரேயாயினும், உனது அனுமதிச் சீட்டின்றி வெளியே போகலாகாது" என்று கட்டளையிட்டனன். அதன் காரணத்தை அறிந்த பாகுராயணன், "அங்ஙனமே யாகுக" என்று கூறிவிட்டுப் பாசறையின் வெளியிலிருந்த ஒரு இருக்கையில் வந்து அமர்ந்து, "அனுமதிச் சீட்டு வேண்டுவோர் எவரேனும் உளரோ?" என்று விசாரித்துக் கொண்டிருக்கையில், மலயகேது அப்பாகுராயணனும் அறியாவண்ணம் பின்புறம் மறைவாய் ஒளிந்துகொண்டிருந்தான். அப்பொழுது ஜீவசித்தி, பாகுராயணனிடம் வந்து, வெளியே போக அனுமதி வேண்டினன். அச்

சமயத்தில் அங்குப் பின்வருமாறு சம்பாஷணை நிகழ்ந்தது. மலயகேது மறைந்திருந்து அதனைக் கவனித்துக் கேட்டான்.

பாகுராயணன் :—சமணத் துறவியே, நீர் இப்பொழுது உமது பிரிய மித்திரனாகிய இராக்ஷசன் ஏவலால் வெளியே போகின்றீரா? வேறு காரியம் ஏதேனும் உண்டா?

ஜீவசித்தி :—(சீற்றத்துடன்) ஐயா, நான் இப்பொழுது பெருந்துரோகியாகிய இராக்ஷசன் பெயர் காதில் விழாத இடத்துக்குப் போகிறேன்.

பாகுராயணன் :—ஐயா, உமது நண்பனிடம் உமக்கு இவ்வளவு கோபம் வந்த காரணம் என்ன? அவன் யார்க்கு என்ன துரோகம் செய்தான்?

ஜீவசித்தி :—அப்பா! அவன்மேல் எனக்குக் கோபம் வருவானேன்? நானோ துறவி. ஏதோ சிலநாள் அவனிடம் பழகினேன். இனி வேறு யாரையேனும் தேடிப்போகிறேன். ஆயினும் அக்கொடியவன் செய்யும் ஈனத்தொழிலை நினைக்க எனக்கே வெட்கமாயிருக்கிறது.

பாகுராயணன் :—சுவாமி, இராக்ஷசனைத் துரோகி என்றும் கொடியவன் என்றும் சொல்கிறீர். அவன் ஈனத்தொழில் செய்கிறான் என்கிறீர். இன்ன தொழில் செய்தான் என்று கூறவேண்டாமா? உமக்கே வெட்கம் விளைக்கக்கூடிய அச்செயல்தான் என்ன?

ஜீவசித்தி :—ஐய, அதனை நான் வாயாற் சொல்லவும் இசையேன்.

பாகுராயணன் :—அங்ஙனம் ஆயின் இங்கிருந்து நீர் வெளிப்படுதற்கு நான் இசையேன்.

ஜீவசித்தி :—அப்படியானால் சொல்லித் தொலைக்கிறேன்; கேட்பாயாக. இதற்கு முன் நான் பாடலிபுரத்திலிருக்கை

யில் எனக்கு இராக்ஷசன் பிரியமித்திரனு யிருந்தான். அப்பொழுது அவன் ஒரு விஷகன்னிகையின் உதவியாற் பருவதேசனைக் கொன்றனன். சாணக்கியன் உண்மையை அறியாது, நானே அதற்குக் காரணன் என்று எண்ணி, என்னை நாட்டைவிட்டு ஓட்டினன். பின்பு நான் மலைநாட்டுக்கு வந்து இராக்ஷசனை அடைந்திருந்தேன். அவன் முன் செய்ததைக் காட்டிலும் மிகவும் கொடிய நன்றி கெட்ட செயலைச் செய்யத் தொடங்குகின்றான். ஆகையால் எனக்கு அவனுடன் சேர்ந்திருக்க விருப்பமில்லை. வேறு எங்காவது சென்று காலம் கழிக்க உத்தேசித்திருக்கிறேன்.

பாகுராயணன் :—முனிவரே, பருவதேசுவரனுக்குப் பாதி இராஜ்யம் அளிக்க மனமில்லாத பாவி சாணக்கியன் தான் அவரை விஷகன்னிகையாற் கொன்றான் என்று நான் கேள்வியுற்றேன். இராக்ஷசன் கொன்றான் என்று நீர் எங்ஙனம் சொல்கிறீர்?

ஜீவசித்தி ;—ஐயோ, சாணக்கியன் விஷ கன்னிகையின் பெயரையே அறியானே. அவன் துஷ்டனே. ஆயினும் அவன் கனவிலும் நினையாத குற்றத்தை அவன்மேல் சுமத்துவது நியாயமில்லை.

பாகுராயணன் :—உமது அபிப்பிராயப்படி இராக்ஷசனே குற்றம் செய்தான் என்று ஏற்படுகிறது அல்லவா?

ஜீவசித்தி :—என் அபிப்பிராயம் என்ன! உண்மை அதுவே.

பாகுராயணன் :—இதோ அனுமதிச் சீட்டு. இனி நீர் வெளியே செல்லலாம்.

இச்சொற்களைக் கேட்டு மனம் பொறாத மலயகேது, உடனே பாகுராயணன்முன் வந்தான்.

மலயகேது :—நண்பனே, ஜீவசித்தி சொல்லியவற்றை நானும் கேட்டேன். இதுவரையில் இராக்ஷசனை நான் என் நன்மையை நாடுகிறவன் என்று கருதி எல்லா அதிகாரங்களை யும் அவன் கையிலேயே ஒப்பித்திருந்தேன். அவனே என் தந்தையைக் கொன்ற பாதகனுய் விட்டானே. இத்தகைய மித்திரத் துரோகிக்கு என்ன தண்டனை விதிக்கலாம்? என் மனம் பதறுகின்றதே.

பாகுராயணன்:—அரசே, பொறுங்கள். மனத்தில் இருக் கும் வயிரத்தை வெளியிடாதிருப்பவரே வெற்றி பெறுவர். கழிந்ததற்கு இரங்குவது அறிவுடையோர் செயல் ஆகாது. நாம் இப்பொழுது சந்திரகுப்தனோடு எதிர்த்துப் போராடும் பெருமுயற்சியில் இறங்கியிருக்கிறோம். இச் சமயத்தில் இரா க்ஷசனோடு பகை கொள்ளலாகாது. போர் நிறைவேறி வெற்றி பெற்ற பிறகு அவனை விலக்கிவிடலாம் என்று எனக்குத் தோன்றுகிறது. பிறகு அரசர் சித்தம் எப்படியோ அப்படி நடத்தலாம்.

மலயகேது :—தோழ, நீ உரைப்பதே தகும். அவனை இப்பொழுதே வதை செய்வோமாயின் அவன் தூண்டுத லால் நம்மைச் சார்ந்திருக்கும் படைத்தலைவர்க்குள் குழப்பம் உண்டாகும்.

அப்பொழுது காவலாளர் தலைவன் அங்கு வந்து, "அரசே, யாரோ ஒருவன், கடிதமும் கையுமாக அனுமதிச் சீட்டின்றி வெளியே போக முயன்றான். அவனைக் கட்டி இழுத்துவந்தேன்" என்று கூறி, அவனைப் பாகுராயணன் முன் கொண்டுவந்து நிறுத்தினான். அரசனும் அவனைப் பார்த்தான்.

பாகுராயணன் :—யார் அப்பா நீ? அயலூரானா? அல்லது இங்கே இருக்கும் அதிகாரிகளில் எவரையேனும் அண்டி இருப்பவனா?

வந்தவன் :—ஐய, யான் அமைச்சர் தலைவராகிய இராக்ஷசர் சேவகனாவேன். என் பெயர் சித்தார்த்தன்.

பாகுராயணன் :—அங்ஙனமாயின் உத்தரவின்றி ஏன் வெளியேற முயன்றாய்?

சித்தார்த்தகன் :—மிக்க அவசரமான காரியமாதலால் உங்களிடம் வந்து அனுமதி பெற்றுக்கொள்ள அவகாசமில்லை.

பாகுராயணன் :—அரசர் ஆணையைக் கடந்து வெளியேறிப் போகுமாறு அவ்வளவு அவசரமான காரியம் என்ன? உடனே தெரிவி. உன் கையிலுள்ள கடிதம் என்ன?

சித்தார்த்தகன் :—ஐயா, இது ஒரு இரகசியக் கடிதம்; எவரிடமும் கொடுக்கக்கூடாது.

இதற்குள் மலயகேது அதைக் கவர்ந்துகொண்டு அதில் இராக்ஷசன் முத்திரை இருக்கக்கண்டு அதிசயித்தவனாய்ப் பின்வருமாறு வாசித்தான் :

"ஒரு இடத்திலிருந்து ஒருவன் மற்றோரிடத்தில் இருக்கும் மற்றொருவருக்குத் தெரிவிப்பது யாதெனில், நமது பகையை ஒழித்ததால் நமது உண்மை முன்னே வெளியாயிற்று. முன்னமே நாம் செய்துகொண்ட உடன்படிக்கைப்படி நமது நண்பர்களுக்கு வாக்களித்த வெகுமதிகள் கொடுக்கப்பட வேண்டும். அங்ஙனம் நடந்தால் அவர்கள் இருக்கும் இடத்தைவிட்டு வேறோர் இடத்துக்கு வரத் தடையிராது. இவர்களிற் சிலர் நம் எதிரியின் செல்வத்திலும், சிலர் யானைகளை அடைவதிலும், சிலர் நாடு பெறுவதிலும் நோக்கம் உள்

ள்வராயிருக்கின்றனர். நீர் எனக்கு அனுப்பிய ஆபரணங்கள் வந்து சேர்ந்தன. நானும் வெறுங் கடிதம் அனுப்பலாகாது என்று சில ஆபரணங்களை அனுப்பியிருக்கிறேன். அவைகளை அன்புடன் ஏற்றுக்கொள்ளவேண்டும். தவிர, மிகவும் நம்பிக்கைக்குப் பாத்திரனாகிய இவனிடம் சில செய்திகளை நேரிற் கேட்டு அறியலாம்."

கடிதத்தை வாசித்து முடித்ததும், மலயகேது பாகுராயணனை நோக்கி, "நண்ப, இவனிடம் இக்கடிதத்தை யார் எவருக்குக் கொடுத்தனுப்பி யிருக்கிறார் என்பதை விசாரித்தறிக" என்றனன்.

பாகுராயணன் :—அப்பா சித்தார்த்தா, இக்கடிதம் யார் எழுதியது?

சித்தார்த்தகன் :—ஐயா, நான் ஒன்றும் அறியேன்.

பாகுராயணன் :—கேட்கும் வழியாற் கேட்டாற் கூறுவாய் போலும்.

இங்ஙனம் கூறிய பாகுராயணன் சேவகரைக் கொண்டு நிர்ப்பந்தம் செய்வித்தான். அப்பொழுது சித்தார்த்தகன் கக்கத்திலிருந்து ஒரு ஆபரணப் பெட்டி கீழே விழுந்தது. அதன் மேலும் இராக்ஷசனுடைய முத்திரை பொறிக்கப் பெற்றிருந்தது. அதையும் கண்ணுற்கண்ட மலயகேது, அம் முத்திரை சிதையாவண்ணம் பெட்டியைத் திறந்து பார்க்க, அதில் தான் இராக்ஷசனுக்கு அளித்த இரத்தினாபரணங்கள் இருக்கக் கண்டான்.

மலயகேது :—நண்ப, பாகுராயண, இக்கடிதம் இராக்ஷசனாற் சந்திரகுப்தனுக்கு அனுப்பப்பெற்றது என்று தெரிகிறது. வாய்மொழியாற் சொல்லியனுப்பிய செய்தியையும் கேட்டறிக.

**சித்தார்த்தகன் :**—அரசே, ஐய, எனக்கு அபயம் அளித்தால் அதையும் கூறிவிடுகின்றேன்.

**மலயகேது :**—நீ ஒன்றும் ஒளிக்காது கூறினால் உனக்கு அபயம் அளிக்கிறோம்.

**சித்தார்த்தகன் :**—ஐய, இக்கடிதம் இராக்ஷசனால் சந்திரகுப்த மகாராஜனுக்கு அனுப்பப்பெற்றது. நான் சந்திரகுப்தனிடம் வாய் மொழியாகச சொல்லவிருந்த செய்தி இதுவே; "நம்முடன் நட்புக்கொண்டிருக்கிற குலூதராஜன், மலயமன்னன், காஷ்மீரநாட்டுக்காவலன், சிந்துதேசத் திறைவன், பாரசீகாதிபதி என்னும் இவ்வைவருள், முதல் மூவரும் தாம் புரியும் உதவிக்குக் கைம்மாறாக, மலயகேதுவின் நாட்டைப்பெற விரும்புகின்றனர். பிற்கூறிய இருவரும் யானைப் படையையும் நிதியங்களையும் பெற விரும்புகின்றனர். ஆதலின் சாணக்கியனை நீக்கி எனக்குச சந்தோஷம் விளைத்ததுபோல, இவர்கள் விருப்பத்தையும நிறைவேற்றி வைக்கவேண்டும்" என்று இராக்ஷசன் சந்திரகுப்தனை அக் கடித மூலமாக வேண்டினன். உண்மை இவ்வளவே.

**மலயகேது :**—நான் எனக்கு நெருங்கிய நண்பராகக் கருதியிருந்த இவ்வைவரும் எனக்குத் துரோகம் செய்யத் துணிந்தனரா? ஆகையால் இராக்ஷசனிடம் அவர்களுக்கு மிதமற்ற அன்பு தோன்றியிருப்பது நியாயமே. நல்லது! விஜயே! நீ இப்பொழுதே சென்று, இராக்ஷசனை இங்கு அழைத்துவருக.

விஜயை என்னும் வாயில் காப்பவள் அரசன் ஆணையால் விரைந்து சென்று இராக்ஷசனை அழைத்தனள். அவன் படை வீரரை அவரவர்க்குத் தக்க இடங்களில் இருந்து போர் புரிய அமர்த்திவிட்டுச் சகடதாசனை நோக்கி, "அன்பனே,

மலயகேது மகாராஜன் இப்பொழுது என்னை அழைக்கின்றார். மேனியில் ஆபரணம் ஏதுமின்றி அங்கு ஏகலாகாது. அவர் எனக்கு அன்புகூர்ந்து உதவிய ஆபரணங்களைச் சித்தார்த்தனுக்குப் பரிசளித்து விட்டேன். ஆகையால், நாம் வர்த்தகரிடம் விலைக்கு வாங்கிய அணிகலங்களில் யாதேனும் ஒன்றைக் கொண்டு வருக. அதனை அணிந்து செல்கின்றேன்" என்றனன். சகடதாசனும் அவ்வண்ணமே, அவ்வாபரணங்களில் ஒரு மாலையைக் கொணர்ந்து கொடுக்க, இராக்ஷசன் அதனை மார்பிற்பூண்டு மலயகேதுவினிடம் சென்றான். இராக்ஷசன் வரவைக் கண்ட மலயகேது அவனை மரியாதையுடன் வரவேற்று ஆசனத்தில் இருத்தி விசாரிக்கத் தொடங்கினன்.

மலயகேது :—ஐய, அமைச்சரே, நீர் இங்குவர இவ்வளவு தாமதமானது ஏன்?

இராக்ஷசன்:—அரசே, நாம் இப்பொழுது புஷ்பபுரியை அடுத்து வந்திருக்கிறோம். பகைவரை எதிர்த்து நிற்றற்குரிய காலம் குறுகிவிட்டது. ஆகையால் போருக்கேற்றவாறு படைகளை அணிவகுத்துக் கொண்டிருந்தேன். அதனாற் கால தாமதம் ஆகிவிட்டது.

மலயகேது :—அணி வகுப்பின் ஏற்பாடு எங்ஙனம் செய்யப்பட்டுள்ளது?

இராக்ஷசன் :—நமது படையுடன் நான் முன்னணியிற் செல்வேன். யவன சைனியத்துடன் காந்தாரமன்னன் இடையில் வருவார். சகர், சீனர், ஹூணர் முதலிய வீரர்கள் பின்னணியில் வருவர். நம் நண்பர்களாகிய ஐந்து அரசர்களும் நம்மைச் சூழ்ந்து காவல் புரிந்து வருவார்கள்.

மலயகேது :—(தனக்குள்) ஓகோ! பகைவனுடன் உடன்படிக்கை செய்துகொண்டு எனக்குத் தீங்கிழைக்க

எண்ணியிருக்கும் இவ்வரசர்களையே இவன் எனக்குக் காவலாய் வைத்துவிட்டான். இதைக்காட்டிலும் வேறு வினை வேண்டா!.........(வெளிப்படையாக) அமைச்சர் தலைவரே, இப்பொழுது பாடலிபுர நகரினுட் சென்று திரும்பி வருமாறு யாரையேனும் அனுப்பி யிருக்கிறீர்களா?

இராக்ஷசன்:—இப்பொழுது நமக்கு அங்கொன்றும் வேலையில்லை. நான் யாரையும் அனுப்பவில்லை. இன்னும் சில தினங்களில் நாமே அங்கு வெற்றி முரசுடன் செல்லப் போகின்றோமே.

மலயகேது:—அங்ஙனமாகில், நீர் எதன்பொருட்டாக இப்பணியாளனைக் கடிதத்துடன் புஷ்பபுரிக்கு அனுப்பினீர்? மிகவும அவசரமாக அவன் போனது ஏன்?

இராக்ஷசன்:—(சித்தார்த்தகனை நோக்கி) அப்பா, சித்தார்த்தக, உண்மை என்ன? அரசர் சொல்வது எனக்கு ஒன்றும் விளங்கவில்லையே.

சித்தார்த்தகன்:—ஐயனே, இவர்கள் அடித்த அடி பொறுது இரகசியத்தை வெளிப்படுத்திவிட்டேன்.

இராக்ஷசன்:—என்ன இரகசியம்? யார் உன்னிடம் சொல்லிய செய்தியை இரகசியம் என்கிறாய்?

சித்தார்த்தகன் ஒன்றும கூறாது மௌனமாய் இருந்தான்.

மலயகேது:—பாகுராயணா, இவன் தன் தலைவனுக்கு அஞ்சி உண்மையை உரைக்காமல் மறைக்கின்றான். நீயே அவற்றை இராக்ஷசன் கேட்குமாறு வெளியிட்டுரைக்கக் கடவாய்.

பாகுராயணன்:—அமைச்சர் தலைவரே, இவனிடம் தாம் ஒரு கடிதத்தைக் கொடுத்து, அதனைச் சந்திரகுப்தனிடம் கொடுத்துச் சில வார்த்தைகள் கூறி வரும்படி கட்டளையிட்

டிருந்தீராம், இந்த சித்தார்த்தகன் சொல்ல அவற்றை அறிந்தோம். அரசர் அதன் உண்மையை அறிய உம்மை இங்கு வரவழைத்தார்.

இராக்ஷசன் :—ஐயோ, நான் அங்ஙனம் ஒன்றும் சொல்லியனுப்பவில்லையே. ஒருவேளை அடிபொறாமல் இவன் ஏதேனும் கூறியிருக்கலாம். அவையனைத்தும் ஆதாரம் சிறிதும் இல்லாத பொய்ம்மொழிகளே.

பாகுராயணன் :—உண்மை அங்ஙனம் இருக்குமானால் இக்கடிதம் ஏது? (கடிதத்தைக் கொடுத்தான்.)

இராக்ஷசன் :—(அதனைப் படித்துப் பார்த்து) ஆகா! இதெல்லாம் நமது எதிரிகளின் சூழ்ச்சியால் விளைந்ததாகும்.

மலயகேது :—சந்திரகுப்தனுக்கு அனுப்பிய இவ்வாபரணங்களைப்பற்றி என்ன கூறுகின்றீர்?

இராக்ஷசன் :—இவ்வணிகலன் நும்மால் எனக்கு அளிக்கப்பட்டது. நான் அதனை இச்சித்தார்த்தகனுக்கு ஒரு விசேஷ சந்தர்ப்பத்தில் பரிசாக அளித்தேன்.

பாகுராயணன் :—மலயகேது மன்னரால் தமது மார்பிலிருந்து கழற்றி உமக்கு விசேஷ மரியாதையாகக் கருதிக் கொடுக்கப்பெற்ற இந்த இரத்தினாபரணத்தை நீவிர் இங்ஙனம் இவ்வற்பப் பணியாளனுக்குப் பரிசாகக் கொடுக்கலாமோ? இது அரசரை அவமதிப்பது ஆகுமே.

மலயகேது :—மந்திரி, இக்கடிதம் உம்மால் அனுப்பப்பெறவில்லை என்பது உண்மையாகில், இதன்மேல் உள்ள முத்திரை உம்முடையதாய் இருக்கக் காரணம் என்ன?

இராக்ஷசன் :—(அதனை வாங்கிப் பார்த்து) ஆம்! இது என் முத்திரை போலவே தோன்றுகிறது. ஆகிலும் இது

வஞ்சகர்களாகிய நமது பகைவர்களால் அமைத்துக்கொண்டு உபயோகிக்கப்பட்ட பொய் முத்திரையாய் இருக்கலாம்.

மலயகேது :—பாகுராயண, அங்ஙனமாகில் இக் கடிதம் யாருடைய கையால் எழுதப்பட்டதாய் இருக்கலாம என்பதை விசாரித்தறிக.

பாகுராயணன் :—சித்தார்த்தக, இக்கடிதத்தை எழுதியவர் யார்? அமைச்சர் முன்னிலையில் உண்மையைக் கூறுக.

சித்தார்த்தகன் :—இக்கடிதம் சகடதாசனால் எழுதப்பெற்றது.

இராக்ஷசன் :—இஃது என் நண்பன் சகடதாசனால் எழுதப்பட்டிருக்குமாகில், நானே எழுதினேன் என்று ஏற்றுக்கொள்ளத் தடையில்லை.

மலயகேது :—அங்ஙனமாயின் சகடதாசனை விரைவில் இங்கே வருவித்து உண்மையை விசாரிக்கலாம.

பாகுராயணன் :—அரசே, இக்கடிதம் உண்மையில் சகடதாசனால் எழுதப்பட்டதாகவே இருக்கலாம. எனினும், அவனை இங்கு வருவித்து விசாரிப்போமாயின், அவன் இவர் முன்னிலையில் " நானே எழுதினேன் " என்று கூறுவானா? ஆகையால் அவனை நேரில் அழைப்பதைக்காட்டிலும், அவன் கையெழுத்துள்ள பழைய கடிதங்களை வருவித்து, அவற்றோடு இக்கடிதத்தின் எழுத்தொற்றுமையை ஆராய்ந்து பார்ப்போம். அப்பொழுது உண்மை வெளிப்படும்.

மலயகேது :—அங்ஙனமே செய்க. எங்ஙனமாயினும் விரைவில் உண்மை வெளியாக வேண்டும்.

பாகுராயணன் :—(வருவித்துப் பார்த்து) இது சகடதாசன் கையெழுத்தைப்போலவே இருக்கிறது. அமைச்சரே! நீரே பார்க்கலாம் (இராக்ஷசனிடம் கொடுத்தான்.)

இராக்ஷசன் :—(நன்கு கவனித்துப் பார்த்துவிட்டுத் தனக்குள்) ஓகோ, இது சகடதாசன் கையெழுத்தே. முத்திரையும் நம்முடையதே. ஆதலால் நாம் இதுவரையில் உயிரினும் சிறப்பாக நட்புப் பூண்டிருந்த சகடதாசனும் தன்னுயிரைக் காத்துக்கொள்ளும்பொருட்டுப் பகைவருடைய சூழ்ச்சியிற் சிக்கித் தன் கையிலிருந்த முத்திரையை உபயோகித்துப் பொய்க்கடிதம் எழுதி நம்மை இங்ஙனம் காட்டிக் கொடுத்துவிட்டான். எல்லாம இறைவன் செயல். (வெளிப்படையாக) இனி நான் ஒன்றும் சொல்வதற்கில்லை.

மலயகேது :—இராக்ஷச, உமது மார்பில் உள்ள இம்மணி வடத்தை எங்குப் பெற்றீர்? இக்கடிதத்திற் கண்டிருக்கும் ஆபரணங்களில் இது ஒன்றோ? இது உமக்கு எங்ஙனம் கிடைத்தது?

இராக்ஷசன் :—ஐயோ, நான் இதனை வர்த்தகரிடம் விலைக்கு வாங்கினேன்.

மலயகேது :—(வாயில் காப்பாளை நோக்கி) விஜயே, இவர் மார்பில் இலங்கும் இம்மணி வடத்தை நீ இதற்கு முன் கண்டதுண்டோ?

விஜயை :—அரசே, இது தமது தந்தையார் அணிந்திருந்த பூணாரமன்றோ? இவரிடம் எப்படி வந்தது?

இராக்ஷசன் :—அரசே, இதுவும் எதிரிகளின் சூழ்ச்சியால் என்னிடம் வந்திருக்கவேண்டும். நான் ஒரு பாவமும் அறியேன்.

மலயகேது :—அமைச்சரே, எனது தந்தையார் முன்பு அணிந்திருந்த ஆபரணங்கள் சந்திரகுப்தனிடம் சேர்ந்த காரணத்தை நீரே அறிவீர். சந்திரகுப்தனிடம் அகப்பட்ட இச்செபூ மணிப் பூண்களை விலைக்கு வாங்கிக்கொண்ட

தாகக் கூறுவது சற்றும் பொருந்துமா? ஒருகால் பொருந்தவும் கூடும். எங்ஙனம் எனில், மிக்க ஊதியத்தைப் பெற விரும்பிய சந்திரகுப்தன் என்னும் வணிகனிடம், இப் பூஷணங்களைப் பெற்றுக்கொண்டு என்னையும், என் அரசையும், செல்வத்தையும் விற்றுவிட்டீர். இவ்விதமின்றி வேறெவ்வண்ணமாக நும் செயலில் உள்ள நியாயத்தை அறிவது என்று எனக்கு விளங்கவில்லை.

இராக்ஷசன் :—அரச, இவை அனைத்தும் பகைவருடைய சதியாலோசனையால் விளைந்தவை. என் ஊழ்வினையும் அவர்கள் முயற்சிக்கு உதவியாக இருந்தது.

மலயகேது :—கோபத்தால் (தன்னை மறந்து) அடா, நன்றி கெட்ட நராதம, முதலில் நீ கொடிய விஷகன்னிகையை மந்திர சக்தியாற் படைத்து உன்னையே முழு மனதுடன் நம்பியிருந்த என் தந்தையை எமனுலகுக் கனுப்பினை. இப்பொழுதும் உன்னிடம் உறுதியான நம்பிக்கை வைத்திருந்த என்னை என் பகைவர்களிடம் விற்கத் துணிந்தாய்.

இராக்ஷசன்:—நராதிப, உமது தந்தையின் கொலைக்குக் காரணமானவன் நான் அல்லனே.

மலயகேது :—வேறு யார் கொன்றவர்?

இராக்ஷசன் :—தெய்வத்தைத்தான் கேட்கவேண்டும்.

மலயகேது :—தெய்வத்தையா? ஜீவசித்தியைக் கேட்டால் உண்மை விளங்காதோ?

இராக்ஷசன் :—(தனக்குள்) ஓகோ, ஜீவசித்தியும் பகைவர் பக்கம் சேர்ந்தவனோ? நன்று, நன்று. எங்கு நோக்கினும் இங்ஙனம் வினை சூழ்ந்தால் நான் ஒருவனாக என்ன செய்யக்கூடும்? எது வரினும் வருக. (வெளிப்படையில்) அரசே இனி உம் விருப்பம்போற் செய்யலாம்.

மலயகேது:—(மிக்க சினத்துடன் சேகரசேனன் என்னும் சேனுபதியை விளித்து) சேனுபதி, இப்பொழுது எனக்கு விரோதமாய்ச் சதியாலோசனை செய்து சந்திரகுப்தனுக்கு உதவிபுரியச் சித்தமாயிருக்கும், சித்திரவர்மன், சிங்கநாதன், புட்கராக்ஷன் என்னும் மூவரையும் படுகுழியில் தள்ளிக் கொல்லக்கடவாய். யானைப்படையை விரும்பிய சிந்துசேனன், மேகநாதன் என்ற இருவரையும் யானைக் காலால் இடறச்செய்து கொலைபுரியக் கடவாய். பின்பு (இராக்ஷசனை நோக்கி) இராக்ஷச, நான் உன்னைப்போல நன்றி மறந்த இராக்ஷசன் அல்லேன். மலயகேது என்னும் மன்னவனுவேன். ஆகையால், இனி நீ உன் விருப்பிற்கிணங்கச் சந்திரகுப்தனைச் சேர்ந்துகொள்ளுமாறு விரைவிற் செல்லலாம்.

சேகரசேனன் என்னும் சேனுதிபதி மலயகேது மன்னன் ஆணைக்கேற்ப அரசர் ஐவரையும் விசாரியாமலே எமபுரிக்கு அனுப்பினுன். பின்பு பாகுராயணன் மலயகேதுவை நோக்கி, "அரசர்க்கு அரசே! இன்னும் ஏன் காலதாமதம் செய்யவேண்டும்? இப்பொழுதே பாடலிபுரத்தைத் தாக்குமாறு படைஞர்களுக்கு ஆணையிடலாம்" என்றனன். மலயகேதுவும், "அங்ஙனமே ஆகுக" என்றுகூறி, படைஞர் அனைவரும் ஒருங்கு திரண்டுவரும் வண்ணம் போர்முரசு முழங்கச் செய்தனன்.

மலயகேதுவின் பக்கத்தில், முக்கிய வீரராயிருந்த அவ்வைந்து அரசர்களும் அகாரணமாய்க் கொலையுண்டது கேட்ட மற்ற சிற்றரசர் எல்லாரும, அவனிடம் வெறுப்புக் கொண்டு, அவனைவிட்டு விலகித் தங்கள் படைஞருடன் தம் தம் நாடு நோக்கித் திரும்பினர். இங்ஙனம் மன்னர் பலரும் திரும்பிச் செல்லவே, சந்திரகுப்தனிடம் பொய்ப்பகை பாராட்டி மலயகேதுவைச் சார்ந்திருந்த பாகுராயணன்,

பத்ரபடன் முதலிய வீரர் அனைவரும் மலைநாட்டுப் படையை வஞ்சகத்தால் அழித்தொழித்து மலயகேதுவைப்பிணித்துச் சிறைப் படுத்தி வெற்றிமுரசு முழக்கிச சந்திரகுப்தனிடம் வந்து சேர்ந்தனர்.

இராக்ஷஸன் மலயகேதுவின் முன்னிலையில் தனக்கு நேரிட்ட மானக்கேட்டை நினைத்து மனம் புண்ணாகி ஒருவரையும் திரும்பிப் பாராமல் பின் விளையும் கோரக் காட்சிகளையும் கவனியாமல் தன் உயிரைப் போக்கிக் கொள்ளத் துணிந்து வனத்தில் நுழைந்தான்.

## பதினைந்தாம் அத்தியாயம்
## சாணக்கியர் வெற்றி

இராக்ஷசன் இங்ஙனம் மலயகேதுவைப் பிரிந்து செல்வான் என்பதை முன்னமே அறிந்திருந்த சாணக்கியர், அவனைத் தொடர்ந்து அவன் செய்யும் செயல்களை ஆராயுமாறு **உதும்பரகன்** என்னும் ஒற்றன் ஒருவனை அனுப்பினர். இராக்ஷசன் தன் வாட்படையையே தனக்குத் துணையாகக் கொண்டு தனித்து நடந்துசென்று நந்தர் அரசாட்சிக் காலத்தில் பெரிய உத்தியான வனமாயிருந்து, அப்பொழுது தேடுவாரற்றுப் புதராய்க் கிடந்த ஒரு தோட்டத்தினுள் நுழைந்தான். உயிரைவிட்டுத் தன் பழியைப் போக்கிக்கொள்ளத் துணிந்தனனாயினும், சந்தனதாசன் கதி என்னவாயிற்று என்பதை அறியவேண்டும் என்னும் ஆசையால், நகரத்தினுள் நுழைய மனம் இருப்பினும் இப்பொழுது இருக்கும் நிலையில் உட்புகுவது மானக்கேட்டுக்கு இடமாம் என்று எண்ணி ஒரு மரத்தடியில் மறைந்து நின்றான்.

இச்செய்தியை அறிந்து கொண்ட சாணக்கியரும், சித்தார்த்தகன், சமித்தார்த்தகன் என்னும் இருவரையும் பார்த்து, "இப்பொழுது நீவிர் இருவரும் கொலையாளி வேடம் புனைந்து சந்தனதாசனைக் கொலைக்களத்துக்கு அழைத்துச் செல்லக் கடவீர்" என்று கூறி அனுப்பினார். பின்பு மற்றொரு ஒற்றனை விளித்து அவனிடம் ஒரு தந்திரம் கூறி இராக்ஷசன் கைவாளைக் கவர்ந்துகொண்டு அவனை ஓட்டுமாறு அனுப்பினான். அவ்வொற்றன் அங்ஙனமே அப் பாழான தோட்டத்திற் புகுந்து, இராக்ஷசன் ஒளித்திருக் கும் இடத்தை யடைந்து, அவனைக் கண்டும் காணாதவன் போல், அங்கு எதிரிலிருந்த ஒரு மரத்தின் அருகிற்சென்று, தன் கையிலிருந்த பணிக்கயிற்றைக் கழுத்திற் சுருக்கிட்டுக் கொள்ள முயன்றான். அதனைப் பார்த்துக்கொண்டிருந்த இராக்ஷஸன் ஓடோடி வந்து, "அப்பா, நீ ஏன் இங்ஙனம் கயிற்றினாற் கழுத்திற் சுருக்கிட்டுக்கொண்டு சாகப் புகுகின் றாய். தற்கொலை செய்துகொள்வது கொடிய பாவமாயிற் றே" என்று மிக்க பரிவுடன் வினவினான். அவ்வொற்றன் இராக்ஷசனை இன்னான் என்று அறியாதவன் போலவே, "ஐய, இந்நகரில் விஷ்ணுதாசன் என்ற ஒரு செல்வ வணி கர் இருக்கின்றார். அவர் எனக்கு உயிருக்குயிரான நண்பர். அவர் இப்பொழுது தன் செல்வங்களை யெல்லாம் நல் லோர்க்கு வழங்கிவிட்டு நெருப்பில் விழுந்து உயிரை விடத் துணிந்து இந்நகரைவிட்டு ஏகினார். அவருடைய மரணச செய்தி என்செவியிற்படுமுன் யான் என்னுயிரை மாய்த்துக் கொள்ள முயல்கின்றேன்" என்று துயரக் குறியோடு கூறி னன்.

அம்மொழிகளைக் கேட்டு மனம் இளகிய இராக்ஷசன், "அப்பா, விஷ்ணுதாசன் அக்கினிப் பிரவேசம் செய்ய

நேர்ந்த காரணம் யாதோ?" என்று வினவினன். அதற்கு, அவன், "ஐய, தனது உண்மை நண்பனாகிய சந்தனதாசன், சந்திரகுப்தனது ஆணையாற் கொலைக்களம் கொண்டுபோகப் பட்டதை இவ்விஷ்ணுதாசன் அறிந்து, அவ்வரசனிடம் சென்று, "மன்னர்பெருமானே! என் மித்திரன் உயிரை அருள்வீராகில் என்னிடமிருக்கும் எல்லாப் பொருள்களை யும் அளித்துவிடுவேன்" என்றுகூறி வேண்டினன். அதனை சிறிதும் செவிக்கொளாத சந்திரகுப்தன், "வர்த்தகத் தலைவ! யான் இப்பொழுது சந்தனதாசனைப் பெரும் பொருளின் பொருட்டுக் கொலைபுரியவில்லை. அவன் என் விரோதியாகி இராக்ஷசனுடைய மனைவி மக்களைத் தன் மனையில் மறைத்து வைத்திருக்கின்றான். அவர்களை நம்மிடம் ஒப்பிக்கும்படி பலமுறை கேட்டும் அவன் அங்ஙனம் செய்ய உடன்பட வில்லை. ஆகையால், மரணதண்டனை விதித்தோம். இப் பொழுதும் அவன் இராக்ஷசன் குடும்பத்தாரை நம்மிடம் ஒப்பித்து விடுவானாகில், ஏதும் அபாயமின்றி சுகமாக வாழ லாம். இல்லாவிடில் நான் விதித்த தண்டனை தவறாது" என்று கூறிவிட்டான். அதுகேட்டு மனம் பொறாத விஷ்ணு தாசன், தன் நண்பன் உயிரிழப்பதற்கு முன்பே, தான் இறக் கத் துணிந்து நெருப்பில் விழப் போய்விட்டான். யானும் இங்கு என் உயிரைப் போக்கிக்கொள்ளத் துணிந்து வந் தேன்' என்று கூறினான்.

இச்செய்திகளைச் செவிசாய்த்துக் கேட்ட இராக்ஷசன், வெகு பரபரப்புடன் அவனை நோக்கி, "அப்பா! சந்தன தாசன் இப்பொழுது உயிரோடு இருப்பானா? கொலையுண் டிருப்பானா?" என்று கேட்டான். அவன், "ஐயனே, இது வரையில் அவன் உயிர் போகவில்லை. இன்னும் சில நிமிஷங்

களில் அவன் கொல்லப்படுவது திண்ணம்" என்றான். உடனே இராக்ஷஸன் அவனைநோக்கி, "நண்ப, நீ விரைந்து சென்று விஷ்ணுதாசனைத் தீயில் விழாமல் தடுத்துக் காப்பா யாக! யான் இதோ சென்று சந்தனதாசனை விடுவிக்கின் றேன்', என்றான். ஒற்றன் "நீர் எங்ஙனம் அவனை விடு விப்பீர்?" என்று கேட்க, இராக்ஷசன் தன் கைவாளைக் காண்பித்து, "என் உயிர்த்துணையாகிய இவ்வாளால் கொ லைக்களத்தில் உள்ள எதிரிகளைக் கொன்று குவித்து, என் நண்பனை உயிரோடு மீட்டு வருவேன்" என்றனன்.

உடனே அவ்வொற்றன் "ஐய! இப்பொழுதுதான் நான் உம்மை இன்னார் என்று அறிந்தேன். சந்தனதாச னுக்கு மெய்ந்நண்பராகிய இராக்ஷசரே நீர் என்பதை அறிந்து கொண்டேன்" என்று கூறி அவன் அடியில் விழுந்து வணங்கினன்.

உடனே இராக்ஷஸன் அவனை எழுந்திருக்கச் செய்து, "நல்லது நீ விரைவில் விஷ்ணுதாசனிடம் செல்வாயாக" என்று கூறலும், அவன், "அமைச்சர் தலைவரே, உம்மிடம் இங்கு ஒன்று தெரிவித்துக்கொள்ள விரும்புகின்றேன். 'முன்னொரு சமயம் சகடதாசன் கொலைக்களத்துக்குக் கொண்டுபோகப்பட்டபொழுது, யாரோ ஒருவன் வாளும் கையுமாய் வந்து கொலையாளிகளைப் பயமுறுத்தி அவனை விடுவித்துப் போய்விட்டான். அதனை யறிந்து பெருஞ்சினங் கொண்ட சந்திரகுப்தன், அக் கொலையாளிகளையே கொன் றொழித்தான். அச்செய்தி நிகழ்ந்த நாள் முதலாகக் கொலை ஞர்கள் வாளேந்தி வருபவரை நெடுந்தூரத்திற் கண்ணுற்ற போதிலும், தாம் உயிர் தப்புவதற்காகக் குற்றவாளிகளைச் சிறிதும் காலம் தாழ்த்தாது கொலைசெய்து விடுகின்றனர்.

ஆகையால், நீவிர் இப்பொழுது நம் அன்பன் உயிரைக் காக்க விரும்புவீராயின், இவ்வாளை வீசி யெறிந்துவிட்டுக் கணப்பொழுதும் தாமதியாது கொலைக்களத்துக்குச் செல்ல வேண்டும்" என்று வேண்டிக்கொண்டான். இராக்ஷசன் அவன் கூறியது மெய்யே என்று நம்பிக் கையிலிருந்த வாளை யெறிந்துவிட்டுக் கொலைக்களம் நோக்கி விரைந்தோடினன்.

அப்பொழுது, சந்தனதாசன் கொலைத்தண்டம் விதிக்கப்பெற்றவர்க்கு உரிய அலங்காரங்களுடன் கொலைக்களம் நெருங்கிவந்தான். அவனைச் சுற்றிலும் கொலைஞர்கள் காவலாய் இருந்தனர். கழுமரத்தின் அருகே வந்ததும், அவனது மனைவி மக்கள் இருபுறமும் நின்று கண்ணும் கண்ணீருமாய்க் கதறியழுதனர். அப்பொழுதும் அவ்வணிகன் சிறிதேனும் மனம் தளராது, மனைவி மக்களைத் தேற்றி, மித்திரனுக்காக உயிரிழக்கக் கிடைத்த பெரும்பேற்றைப் புகழ்ந்து பேசிக்கொண்டிருந்தான். அவனைக் காப்பாற்றக் கருதி அங்குவந்த இராக்ஷசன், அக்காட்சியைக் கண்டு மனம் உருகிச் சந்தனதாசன் மனைவி மக்களை நோக்கி, "எனது நண்பன் உயிர்க்கு இனி அபாயம் இல்லை. அதற்காக நீங்கள் அஞ்ச வேண்டாம்" என்று கூறி அவர்கள் கண்ணீரை மாற்றினான். பிறகு பின்வருமாறு அங்குச் சம்பாஷணை நிகழ்ந்தது.

இராக்ஷசன்:—கொலைஞர்களே! உங்கள் அரசனுக்குக் கொடிய விரோதியான இராக்ஷசனாகிய யான் நேரில் வந்திருக்கிறேன். நான் இருக்கும்போது என் நண்பன் நல்லுயிரைப் போக்குவது தகாது. நில்லுங்கள்! நில்லுங்கள்!! (கழுமரத்தைக் கிட்டிச் சந்தனதாசனை நோக்கி) அன்பனே! நான் வந்துவிட்டேன். இனி நீ உன் மனைவி மக்களோடு உன் மனையகம் புகுந்து நன்கு வாழலாம்.

சந்தனதாசன்:—அன்பரே! இதுகாறும் யான் செய்த முயற்சி வீணாக்கி எனக்கு வரும் புகழையும் கெடுத்தீரே. இது உமக்குத் தகுமா?

இராக்ஷசன்:—மித்திர சிகாமணியே! எனக்காக இன்று வரை நீ புரிந்துள்ள பேருதவிக்கும், இப்பொழுது நீ உயிர் கொடுக்கத் துணிந்திருப்பதற்கும் நான் புரிவது இணையாகுமோ? என் பாவத்தால் நல்லோனாகிய நீ, அடியோடு அழிவது தெய்வ சம்மதம் ஆகாது. பாவத்தைச் செய்தவனே அதன் பயனை அனுபவிக்க வேண்டும். (கொலைஞர்களை நோக்கி) கொலைஞர்களே! நீங்கள் உங்கள் தலைவராகிய சாணக்கியரிடம் சென்று, "நிரபராதியும், நற்குண நற்செய்கை நிறைந்து எவராலும் நன்குமதிக்கப் பெற்றவனுமாகிய சந்தனதாசனை விடுவித்து, உண்மையில் அவரது சினத்துக்காளாகிய இராக்ஷசனாகிய யான் வந்திருக்கின்றேன்" என்பதாகச் சொல்லி, என்னைக் கழுவேற்றக் கட்டளை பெற்று வருவீர்.

இதற்குள் சாணக்கியர் சந்திரகுப்தனோடு அங்குவந்து, இராக்ஷசன் பாதத்தில் விழுந்து வணங்கிச் சந்திரகுப்தனையும் வணங்கச்செய்து, இராக்ஷசனை நோக்கிப் பேசலாயினர்.

சாணக்கியர்:—அமைச்சர் தலைவரே! நந்தர் குலத்தில் நிலைபெற்ற அன்பும், அரசியல் நூற்பயிற்சியில் ஒப்பற்று விளங்கும் திறமும் படைத்த நீவிர், நந்த மரபிற் பிறந்தவனாகிய இச்சந்திரகுப்தனுக்குத் தக்க முதல்மந்திரியாக அமர வேண்டும் என்ற எண்ணத்தால், யான் இவ்வளவு இடர்களை விளைத்து உமது மனத்தைச் சோதித்தேன். புடமிட்ட பிறகல்லவோ பொன்னும் ஒளிபெற்று விளங்குகின்றது! நீவிர் இச்சந்திரகுப்தன்மீது தயை கூர்ந்து, உம்முடைய பூரண பக்திக்குரிய நந்த வமிசத்தில் இவனைத் தவிர உரிமையுடை

யோர் இப்பொழுது வேறு எவரும் இல்லாததால், நந்தர்களி டம் பணிபூண்டு புகழ்படைத்த உம்முடைய அனுபவம் இவ னுக்குப் பயன்படுமாறு பிரதான மந்திரி பதவியை அங்கீ கரித்தருள வேண்டுகின்றேன்.

**இராக்ஷசன்:**—சாணக்கியரே! இப்பொழுது கொலை யாளிகளால் தீண்டப்பட்டு அசுத்தனாயிருக்கும் நான் அமைச்சனாதற்குத் தகுதியுடையேன் ஆவேனோ? நீர் என்னைத் தொடுவதும் தகாதே.

**சாணக்கியர்:**—இராக்ஷசரே! இவ்விருவரும் உண்மை யிற் கொலையாளிகள் அல்லர்; சித்தார்த்தகன் சமித்தார்த்த கன் என்ற பெயர்பூண்ட அரச சேவகர்களே! இச் சித் தார்த்தகன் மலைநாட்டிற் செய்த செயல்களை நீவிர் அறிவீர். சகடதாசன் கையெழுத்தும் உமது முத்திரையும் கொண்ட கடிதத்தை எழுதுவித்தவன் இவனே. பாகுராயணன், பத்ரபடன் முதலிய போர்வீரர்களைப் பொய்ப்பகை பாராட்டி மலயகேதுவைச் சார்ந்து வாழச்செய்தவன் யானே. வர்த்தக வேடம் பூண்ட மறையோர்களால் பருவதேசன் பூணாரங் களை உம்மிடம் விற்றுவரச் செய்தவனும் யானே. உமக்கு நன்கு விளங்காமல் நிகழ்ந்த பல சூழ்ச்சிகளும் இராஜசேவ கர் உதவியைக்கொண்டு என்னால் இயற்றப்பெற்றனவே. ஜீவசித்தியென்ற சமணத்துறவி, என் நண்பருள் ஒருவனா கிய இந்துசருமன் ஆவன். சந்திரகுப்தனுக்குத் தீங்கு விளையாமற் காக்கும்பொருட்டு நான் செய்த பல சூழ்ச்சிக ளுக்கு அவன் உதவியும் உண்டு. இச்சூழ்ச்சிகளால் மர ணம் அடைந்தோர் அனைவரும் தம் குற்றங்களுக்கு ஏற்ற தண்டனை அடைந்தாரேயன்றி ஒருவரேனும் அநியாயமான மரணத்துக்கு ஆளாகவில்லை. இவையெல்லாம் ஆராய்ச்சி

யினை மிக்க உமக்கு எளிதில் விளங்கும். சந்தனதாசனும், சகடதாசனும் உம்மை இங்கு வருவிக்கும்பொருட்டே இவ்வளவு துன்பமும் அடைய நேர்ந்தது. இனி அவ்விருவரும் முன்னிருந்ததைக் காட்டிலும் சிறந்த நிலையை அடைந்து வாழ்வர். மலயகேதுவை உம் இஷ்டம்போல் நடத்தலாம்.

இராக்ஷசன்:—சாணக்கியரே! அரசர் விரும்புவதாலும் நீர் பல நியாயங்களைக் கூறுவதாலும் நான் முன்போல இப்பதவியை ஏற்றுக்கொள்கிறேன். மலயகேதுவை விடுவித்து மரியாதையோடு மலைநாட்டுக்கு அனுப்பிவிடலாம். அவன் என்னை அகாரணமாக அவமதித்தானாயினும், அது குற்றம் ஆகாது. இனி நீர் இங்கு அரண்மனையின் ஒரு பகுதியில் இருந்து இராஜகுருவாய் விளங்கவேண்டும்.

சாணக்கியர் :—இராக்ஷசரே, நான் என் சபதத்தை நிறைவேற்ற இவ்வளவும் செய்ய நேர்ந்தது. இராஜ்ய காரியங்களில் எனக்குச் சிறிதும் பற்றில்லை. வனத்தில் வாழ்ந்து காய்கனிகளை உண்டு உடம்பை வாட்டித் தவம்புரிந்து உண்மைப்பொருளை நாடுவதே என் நோக்கமாய் உள்ளது. இன்று எனது அவிழ்ந்த சிகை முடிக்கப்பெற்றதால் இனி நான் இங்கிருத்தற்கில்லை. போய்வருகிறேன், விடைகொடுக்கவேண்டும்.

பின்பு சந்திரகுப்தன் மன உருக்கத்தோடு குருவின் திருவடிகளிற் பணிந்து, "சுவாமி, ஒருநாள் உங்கள் ஆணைக்கிணங்க, நான் உங்களைக் கோபித்துப் பேச நேர்ந்த குற்றத்தைப் பொறுத்தருள வேண்டுகிறேன்" என்று கூறிப் பணிந்தான். சாணக்கியர் " குமார, அதுவும் எனது சூழ்ச்சியால் நடந்ததே. எய்தவன் இருக்க அம்பை நோவது எப்படி? நான் அங்ஙனம் நிகழ்த்தும்போது நீ நின் செயலைப்பற்றி

வருந்துவதேன். அன்று அங்ஙனம் செய்யாமல் இருந்தால் இன்று இம்மந்திரிரத்னத்தை அடைந்திருக்கக் கூடுமோ? எல்லாம் நன்மைக்கே என்று கருதி அமைதியடைந்து, குடிகளை உயிர்போலக் கருதி, இராக்ஷசர் கூறும் நெறிகளில் நின்று அரசு புரிந்து நீடுவாழ்க. நின் மரபு உலகம் புகழ ஓங்குவதாக" என்று வாழ்த்தித் தவம்புரியச் சென்றார். சந்திரகுப்தன் நெடுங்காலம் அரசுபுரிந்து, பெருஞ் செல்வமும் தருமமும் நீதியும் கல்விநலமும் தெய்வபக்தியும் பெருக மகதநாட்டை வாழ்வித்தான்.

பொங்கும் மங்களம் எங்கும் தங்குக."



# அரும்பதவுரை

பக்கம்

1. எழில் - அழகு.
,, கோப்பெருந்தேவி - இராசமாதேவி என்ற இருசொற்களும் பட்டத்து அரசி என்ற பொருள் தரும்.
3. திங்கள் - மாதம்
,, ஊன்றடி - மாம்சபிண்டம்.
,, உற்பாதம் - தீமைக்குறி.
,, ஆகாயவாணி - அசரீரி.
,, சாதகன்மம் - பிறப்பின் காலத்திற் செய்யப்பெறும் வைதிகச் - சடங்கு.
,, நாமகரணம் - பெயரிடுதல்.
,, அன்னப் பிராசனம் - சோறு கொடுக்கும் சடங்கு.
,, சௌளம் - குடுமிவைத்தல்.
4. ஆத்தான மண்டபம் - அரசர் அவைக்கள மண்டபம்.
,, பொறை - பாரம்.
5. மித்திரபேதம் - நட்புப் பிரித்தல்.
7. மதலையர் - மக்கள்.
,, மக்கள் - குடிகள்.
9. பெருமிதம் - கர்வம்.
,, ஆதரம் - பிரியம்.
10. படைகள் - சைனியம்.
,, கள்ளம் - வஞ்சகம்.
,, பக்கல் - பக்கம்.
11. சிரமசாத்தியம் - சிரமப்பட்டு முடிக்கவல்லது.
14. மரபு - வம்சம்.
,, இழைத்தல் - செய்தல்.
13. கலம் - பாத்திரம்.

14. சேமித்தல் - போற்றுதல்.
,, தம்முன் - தமையன்.
15. உகுத்தல் - சிந்துதல்.
,, மதியூகி - புத்திமான்.
16. கௌரி - சிங்கம்.
17. ஈமக்கடன் - இறந்தவர்க்கு இயற்றும் கிரியை.
17. கேசரி - சிங்கம்.
17. பொறி - இயந்திரம்.
17. காந்தம் இரும்பை - இழுக்கும் பொருள் (**Magnet**)
18. இருப்புச்சலாகை - இரும்புக் கம்பி.
18. மாயச்சீயம் - பொய்ச்சிங்கம்.
18. மாற்றார் - பகைவர்.
19. அக்கிரபோஜனம் - முன்னிருந்து உண்பது.
20. ஆசி - வாழ்த்து.
,, வினையம் - மரியாதை.
,, நீறு - சாம்பர்.
,, விப்பிரர் - அந்தணர்.
22. படைக்கலம் - ஆயுதம்.
,, அளவளாவுதல - பேசுதல்.
,, விதி - வினை.
23. அடித்துகள் - பாததூசி.
24. செவ்வென் - நன்கு.
25. எள்ளுதல் - இகழ்தல்.
,, ஈடு - ஒப்பு.
,, எடுப்பு - உயர்வு.
,, ஊட்டுப்புறை - உணவுகொள்ளும் இடம்.
,, பீடம் - ஆதனம்.
26. அக்கிராசனம் - முதல் இருக்கை.
,, பெருமிதம்- பெருமை யுணர்ச்சி.

26. போனகம் - உணவு.
,, வரிசை - மதிப்பு.
,, பரிசு - பெருமை.
27. அச்சுஆணி - அச்சில் உள்ள ஆணி.
,, வேதாங்கங்கள்-வேதத்தின் அங்கமாகிய சாஸ்திரங்கள்.
28. சிகை - குடுமி.
,, குஞ்சி - ஆண் மயிர்.
29. நச்சுமுளை - விஷமுளை.
,, பரிபவம் - அவமான செயல்.
,, தோன்றாத்துணை-வெளிப்படையில்தோன்றாததுணை
30. வாகடம்- வைத்தியநூல்.
31. சூளுரை - சபதம்.
32. பள்ளி - சமணத் துறவிகள் வாழும் இடம்.
33. கோழைத்தனம் - அஞ்சும் இயல்பு.
,, வாய்வன்மை - பேசும் திறம்.
,, மந்திரத்தலைவன் - பிரதான மந்திரி.
,, மாயத்துறவி - பொய் வேடத் துறவி.
,, மயிற்பீலி - சமணர் மந்திரிக்க உதவி மயில் இறகுக் கட்டு.
,, துர்ப்போதனை - தீயபோதனை.
,, சின்னாள் - சிலநாள்.
34. பரிகரித்தல் - போக்குதல்.
35. படைவலி - படைஞர்களால் உள்ள பலம்.
,, கௌடில்யநீதிசாஸ்திரம்-அர்த்தசாஸ்திரம் என்றும கூறப்படும்.
,, வருவாய் - வரவு.
36. ஒற்றர் - சாரர் எனப்படுவர் (Spies).
37. சோதரன் - சகோதரன்.
38. வெள்ளம் - மிகுதி (எண்).

33 ஆஷாடம் - ஆடிமாதம்.
,, கிருஷ்ணபட்சம்-சந்திரன் சிறிதுசிறிதாகத் தேய்ந்து வரும் நாட்களுக்குத் தேய்பிறை அல்லது கிருஷ்ண பட்க்ஷம் என்று பெயர். கிருஷ்ணம் என்றால் கருமை
,, பிரதமை - முதல்திதி.
,, புஸ்பபுரி - பாடலிபுரம்.
39. வடபால் - வடக்குப் பக்கம்.
,, கிராதர் - வேடர்.
,, சமர் - போர்.
,, பிதாமஹர் - பாட்டனார்.
40. இரத்தல் - யாசித்தல்.
41. அநாதர் - தலைவர் இல்லாதவர்.
,, அரண் - கோட்டை.
,, அவதி - துன்பம்.
,, வானகல் - சுவர்க்கல்.
43. ஒருப்படுத்தல் - சம்மதித்தல்.
44. அராஜகம் - அரசனை இழந்தது.
,, மாய்வித்தல் - இறக்கச செய்தல்.
45. நசசுக்கனி - விஷம் ஊட்டிய பழம்.
46. அந்தகன் உலகு - எமன் உலகு.
47. வயிரம் - பகை.
48. ஆபிசா வோமம் - பிறர்க்குத் தீமை புரியும் கருத்தால் இயற்றும் சடங்கு.
50. மித்திரசிகாமணி - நண்பருள் தலைவர்.
,, புவனசுந்தரி - உலகத்து அழகி.
53. வதை - கொலை.
55. நேரிது - தக்கது.
58. நள்ளிரா - நடு இரவு.
,, பரிஜனம்!- பரிவாரம்.

60. மருத்துவன் - வைத்தியன்.
62. எமலோக வாதனை - எமபுரியில் உள்ள துயரங்கள்.
இறைவன் - அரசன்.
65. காவலன் - அரசன்.
65. சச்சரவு - கலகம்.
66. வகிப்பது - தாங்குவது.
66. தபோவனம் - தவம் புரியும் காடு.
67. ஆப்தமித்திரன் - உண்மை நண்பன்.
,, விரட்டுங்கள் - ஓட்டுங்கள் (உலக வழக்குச் சொல்).
,, கோமான் - தலைவன்.
68. கேடு சூழ்தல் - கெடுதி விளைக்க யோசித்தல்.
,, நிதிச்சாலை - கஜானா.
69. மாணவகன் - மாணவன்.
,, வெகுள்தல் - கோபித்தல்.
,, துராத்மா - தீயோன்.
70. நிம்மதி - அமைதி.
71. தாழ்த்தல் - தாமதித்தல்.
,, உவப்பு - மகிழ்ச்சி.
72. வைதாளிகன் - அரசரைப் புகழ்ந்து பாடுவோன்.
,, கஞ்சுகி - சட்டை யணிந்த அரச சேவகன்.
73. நிருவகித்தல் - தாங்குதல்.
74. துறத்தல் - நீங்குதல்.
74. பணி பூணல் - சேவகம் செய்தல்.
75. அபாரம் - கரையற்றது.
77. விடுதி - தங்கும் இடம்.
,, உளவு - மறைவான விஷயங்கள்.
78. நள்ளிரவு - நடு இராத்திரி.
,, மரித்தல் - மரணம் அடைதல்.
80. முத்திரித்தல் - முத்திரை யிடுதல்.
81. பொற் பூண்கள் - பொன்னாலாகிய ஆபரணங்கள்.

81. முடிசசு - கிழிதுணி.
,, பொழிதல் - சுற்றிக் கட்டுதல்.
82. குற்றேவல் - சிறிய பணி.
83. பணியாளன் - சேவகன்.
86. இருக்கை - ஆசனம்.
87. இசைதல் - சம்மதித்தல்.
89. வியிரம் - உட்பகை, கோபம்.
91. நிர்ப்பந்தம் - கடுந் தண்டம்.
92. நிதியம் - செல்வம்.
,, மிதம் - அளவு.
39. இழைத்தல் - செய்தல்.
95. அணிகலன் - ஆபரணம்.
97. நண்பு - சிநேகம்.
,, மணிவடம் - இரத்தினமாலை.
,, இலங்கும் - விளங்கும்.
,, பூணாரம் - மாலை.
,, செழுமணிப் பூண்கள் - இரத்தினாபரணங்கள்.
98. நராதமன் - மனிதருட் கீழானவன்.
,, நராதிபன் - அரசன்.
99. போர்முரசு - போர் புரிவதற்காக முழங்கும் முரசம்
100. பிணித்தல் - கட்டுதல்.
101. மணிக்கயிறு - நன்கு முருக்கேறிய சிறு கயிறு.
103. காலம் தாழ்த்தல் - தாமதித்தல்.
104. பெரும்பேறு - பெரி பாக்கியம்.
105. நிரபராதி - குற்றமற்றவன்.
,, அரசியல் நூல் - ராஜ தர்ம சாஸ்திரம், அர்த்தசாஸ்திரம்.
107. பற்று - ஆசை.
108. மந்திரி ரத்னம் - அமைச்சருட் சிறந்தவர்

---

Printed at the Liberty Press, Madras.